லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




அறிவைப்பரவச் செய்வதற்கான

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1902ஆம் ஜனவரிமீ. [இலக்கம் 9.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy $7\frac{1}{2}$ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *7s. 6d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People:—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. $5\frac{1}{2}$ AS.; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *5s. 6d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and are vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாசசந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது எப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

READINGS AT HOME.

A GLIMPSE INTO THE FUTURE.

SECOND SERIES.

MUDRA RAKSHASA OR CHANAKYASUTRAM

A ROMANCE OF THE MEDIEVAL TIMES.

1ST DAY.

இல்லப்படிப்பு-வருங்கால திருஷ்டி.

## முத்திராராக்ஷசம் என்னும் சாணக்கிய சூத்திரம்.

1-ம் நாள் படிப்பு.

ருக்மணியம்மாள் போஜனாதி காரியங்களை முடித்துக்கொண்டு வழக்கம்போலத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து தாம்பூலம் தரித்துக் கொண்டிருக்கையில், கைலாசத்தாத்தா மெல்லமெல்லப்பூத்தாற்போல் அடியெடுத்து வைத்துக்கொண்டு சமீபத்தில் வந்து உட்கார்ந்தார். அப்போது, ருக்மணி, "என்ன, தாத்தாவுக்குத் தள்ளாமை மேலிடுகிறாற்போலிருக்கிறதே. நீர் வருவதைப்பார்த்ததும் எனக்கு ராமாயணத்தில் ஒருபாட்டு நினைவுக்குவந்தது" என்றாள்.

தாத்தா.—தள்ளாமை மேலிடாமல் இனிமேல் பால்யம் திரும்பப்போகிறதா எனக்கு? நிற்க. ராமாயணப்பாட்டென்றாயே எங்கே கேட்போம் சொல்லு.

ருக்மணி.—ராமாயணமென்றால் தாத்தாவுக்குத் தேவாமிர்தம் பொழிகிறாற்போலேதான். சொல்லுகிறேன் கேளும். இராவணன் சீதாபிராட்டியாரிடத்தில் கபடசந்நியாசி வேஷம் பூண்டு வந்தது உமக்குத் தெரியுமல்லவா. அந்தகட்டத்தில் கம்பர் அவனை வருணிக்கும்போது,

"பூப்பொதி யவிழ்ந்தன நடையன் பூதலம்
தீப்பொதிந்தாமென மிதிக்குஞ் செய்கையன்
காப்பரு நடுக்குறுங்காலன் கையினன்
மூப்பெனும் பருவமுமுனிய முற்றினன்."

என்று சொல்லியிருக்கும் பாட்டு ஞாபகத்தில் வந்தது.

தாத்.—கை நடுக்கக் கால்நடுக்க அவ்வளவு தளர்ச்சியடைந்தேனா? காலிலே கொஞ்சம் பித்தவெடிப்பினாலல்லவோ பூத்தாற்போல் நடக்கிறேன். நன்றாய் இராவண சந்நியாசிக்கென்னை ஒப்பிட்டாய்!

ருக்.—கோபித்துக்கொள்ளாதேயும். சுப்பு, தாத்தாவுக்குக்கொஞ்சம் விசிறி போடு பார்ப்போம். சிவகாமி, எலுமிச்சம்பழம் பிழிந்த நீர்மோர்வைத்திருக்கிறேன் கொஞ்சம் கொண்டுவந்து கொடு.

தாத்.—இல்லாமற்போனால் இவ்வளவு களைப்பிருக்கமாட்டாது. கீழைத்தெரு பஞ்சு அவாத்தில் என்னவோ பையனுக்குப் பிறந்தநாளாம், சாப்பிடச்சொன்னான். சாப்பாட்டுக்குப் போதும் கொஞ்சம் கூட ஆய்விட்டது. அங்கேயிருந்து இவ்வளவுதூரம் நடந்தும் வந்தது வெகு களைப்பாய்ப்போயிற்று.

ருக்.—சாப்பாடும் குருத்துவமாய் இருந்திருக்கும். அதையேன் சொல்லாமல் விட்டுவிடுகிறீர். உப்பிட்டு, ஆமோவடை, பூரி, லாடு உண்டோ?

தாத்.—பூரி லாடுவை ஆர் கண்டார்? போளி வடைதான் இரண்டு கிடக்கிறது. தமயந்தியின் கதை நேற்றோடு முடிந்துவிட்டதே. இனிமேல் எதைப்படிக்கிறாற்போலே? காலக்ஷேபத்துக்கு ஒன்று வேண்டுமே வீணாக வெட்டிப்பேச்சில் காலம் கழிப்பதில் ஏதாவது கதை புராணங்களைக் காதால் கேட்டால் இகபரசாதகம் இரண்டுக்குமாமே.

ருக்.—ஆமாம் நீர் சொல்லுவது நியாயம்தான். ஆயினும் உமக்கும் எனக்கும் ஒன்றும் வேண்டியதில்லை. நீர் சிவநாமங்களை ஜபித்துக்கொண்டு காலத்தை சத்விஷயமாகச் செலுத்திவிடுவீர். எனக்கும் என் கிருககிருத்தியங்களில் போது சரியாய்ப் போய்விடும். பெண்கள் நாமிதை நிறுத்

திவிட்டோமா, உடனே சவாரிபுறப்படு வார்கள். சுப்பு ஒருவேளை எனக்குப் பயந்து அடங்கியிருந்தபோதிலும், சிவகாமி கால் நாழி தங்கமாட்டாள். அவளுடைய சிநேகிதிகள் இதற்குள்ளாகவே நான்குபேர் வந்துபோய்விட்டார்கள். ஆதலால் இவர்களுக்காகவாவது ஒன்றைப்படிக்கச் சொல்லிப் போது போக்கினல் தாழ்வில்லை. எதைப்படிக்கலாம்?

தாத்.—இதுவரையில்தான் புராணவிஷயமாக ஒன்றைப்படித்தோம். இனி சரித்திர விஷயமாக ஒன்றைப்படிக்கலாமா என்று யோசிக்கிறேன். உன் அபிப்பிராயம் என்ன?

ருக்.—நீர் சொல்லுவது உண்மையே. ஆயினும் சரித்திரம் பெண்களுக்குப் படித்தற்கருகம் அல்லவென்றும், புருஷர்களுக்கே உரியதென்றும், சிலர் எண்ணக்கூடும். அதில் சண்டையும் பூசலுமே அதிகமும்முரமாயிருக்கும். ஸ்திரீகளுக்கடுத்த சருமங்களை விசேஷமாகப் போதியாததலால் கொஞ்சம் தியங்குகின்றேன்.

தாத்.—சரித்திரம் பெண்களுக்கருகமல்லவென்று கொள்வது முற்றிலும் பிசகு. இக்காலத்துப்பெண்களுக்கு முற்காலத்துப் பெண்கள்போலிருந்தாற்போதாதே. புருஷர்களுடைய வியவகாரங்களில் சிறிதும் தலையிட்டுக்கொள்ளாமல், தமது கிருககிருத்தியங்களில் மாத்திரம் கவனத்தைச் செலுத்தும் ஸ்திரீகள் புருஷர்களுக்கு விசேஷ உதவியாகமாட்டார்கள். புருஷர்களுடைய காரியாகாரியங்களைத் தெரிந்து, அவர்களுக்குத் தம்மால் இயன்ற அளவில் தக்க ஆலோசனைகளைச் சொல்லி நற்றுணையாயிருக்க வேண்டுமாயின், இந்தச் சரித்திரஞானமும் பெண்களுக்கு அவசியமானது, பூர்வீகர்களுடைய் செய்கையும் பெருமையும், சட்டமும் திட்டங்களும், அறிவும் ஆற்றலும், பெண்களும் தெரிந்திருத்தல் அவர்களுக்கு மிக்கபிரயோசனமாகுமென்பதில் சந்தேகம் இல்லை. அன்றியும் சரித்திரங்களில் லோகதர்மங்களும் காரியங்களும் புராணங்களில் விட எவ்வளவோ விரிவாக, விளங்கும்.

ருக்.—ஆனல் சரி எந்தச் சரித்திரத்தைப்படிக்கலாம். முற்றும் தேதிவாருகப்பாடசாலைகளில் கற்பிக்கும் சரித்திரங்களை விட்டு சரித்திரசம்பந்தமான ஒருகாவியத்தைப்படித்தல் உசிதமாயிருக்குமென்று எண்ணுகிறேன். நீர் முத்ரா ராக்ஷசம் என்னும் சாணக்கிய சூத்திரக்கதை கேட்டிருக்கிறீரா?

தாத்.—சாணக்கிய சூத்திரமா? பேர்தான் கேட்டிருக்கிறேன். கதையின் விவரம் கேட்டதில்லை. வெகு ரசமாயிருக்குமென்று கேள்வி, படிக்கச்சொல்லுகேட்போம்.

ருக்.—சுப்பு, நேற்று அப்பா புதிதாக வாங்கி வந்த புஸ்தகம், அலமாரியில் வைத்திருக்கிறேன், எடுத்துக்கொண்டுவா.

சிவகாமி.—என்ன அம்மா, சாணக்கிய சூத்திரமா? நான் வைத்துப் படித்துக்கொண்டிருக்கிறேன். வெகு ரஸமாயிருக்கிறது. நான்தான் இதைப்படிப்பேன். சுப்புவுக்கு இது படிக்கத்தெரியாது.

சுப்பு.—அது தமிழ்ப்பாஷைதானே? அல்லது நீ படித்துப் பரிக்ஷைகொடுத்திருக்கும் இங்கிலீஷோ? இங்கிலீஷ் கிங்கிலீஷ் படித்துக் கரைகண்டுவிட்டையோ உனக்கு வாய்வேறுண்டு. ஊரில் ஒருவரை வைக்கமாட்டாய். என்னிலும் கடையாய் இந்த கொள்ளைத்தமிழைத் தட்டித் தடவுகிறதிலேயே உனக்கு இவ்வளவு ராங்கியாயிருக்கிறது.

தாயார்.—சண்டைப்படாதேயுங்கள். நீதானே வாசி சிவகாமி.

சிவகாமி எடுத்துவாசிக்கிறாள்.

---

முதற்பாதம்.

## நவநந்தனுபிஷேகம்.

கங்காதீரத்தில், மகததேசத்துக்கு இராஜதானியாகப் பாடலீபுரம் என்றோர் நகரமிருந்தது. அதற்குப் புஷ்பபுரமென்று மற்றோர் பெயருமுண்டு. அதில், சந்திரவம்சத்திற் றோன்றிய நந்தராஜனென்பவன், சூரியனைப் போல்பிரபாவமுடையவனாய் மேன்மையோடு ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டு வந்தனன். அவனுக்குச் சருவார்த்தசித்தி யென்று மற்றொரு பேருமுண்டு. அவனுக்கு ராக்ஷசன் என்று ஒரு மந்திரியிருந்தனன். பெயர் ராக்ஷசனென்றிருப்பினும், குணத்திலும் செய்கையிலும் மிக்க நன்மையுடையவனாய்ப், புத்திவன்மையிலும் சிறந்தவனாயிருந்தனன். அந்த நந்தராஜனுக்கு மனைவிகள் இருவர். மூத்தவளாகிய சுநந்தை யென்பவள் க்ஷத்திரிய புத்திரி. இளையவளாகிய முரையென்பவள் சூத்திரகுலத்தவள். அரசனுக்கு நெடுநாளாக அவ்விரு மனைவிகளிடத்தும் புத்திரருண்டாகாமையால் அவன் மனம் வருந்தியிருக்க அக்காலத்தில், ஒரு பகல் அவனைக்காணும்பொருட்டு மகா தபோபலமுள்ள ஒரு முனிவர் ஆங்கு எழுந்தருளினர். அவ்வந்தணரைக் கண்டு இறைமகன் அருக்கிய பாத்தியாதிகளாலே அவரைப் பூசித்து, அவரது பாதங்களைக்கழுவிய நீரையெடுத்துப் பத்தியோடு தன் மனைவிமார்மேற் றெளித்தனன். தெளித்த ஜலத்தில் ஒரு துளி முரையின்மேலும், ஒன்பது துளி சுநந்தையின் மேலும் விழுந்தன. முரை தன்மேல் வீழ்ந்த துளியைப் பத்தியோடு கைக்கொண்டு தரித்தனள். சுநந்தையோ, உடல் சிலிர்த்து அருவருப்புற்றனள். முனிவர் இருவருடைய மனோபாவத்தையும் அறிந்து, முரையின் மேற் சந்தோஷமும், சுநந்தையின் மீது கோபமும் கொண்டனர். பின்பு அவர் தாம்வந்த காரியத்தை அரசனோடு பேசிவிட்டு அவன்பால் விடைபெற்றுச் சென்றனர்.

அரசன் மனைவியர் இருவரில் முரையென்பவள் முதலிற் கருப்பந்தரித்துப் பத்துமாதமும் நிறைந்து உத்தமகுணமுள்ள ஓர்புத்திரனைப்பெற்றனள். அரசன் அகமகிழ்ந்து அப்புத்ரனுக்கு மௌரியன் என்று பெயரிட்டுச், செய்தற்குரிய கருமங்கள் யாவும் செய்து, தக்கவயதுவந்ததும் அஸ்திர சஸ்திராதி ஆயுதாப்பியாசமும் செய்வித்தனன். அப்புத்திரன் நாளுக்கு நாள் வீரியம், விநயம், நயம் முதலிய குணங்களிற் சிறந்து பூர்வபக்ஷத்துச் சந்திரனைப்போல அரசன் கண்டு பெருமகிழ்ச்சி கொள்ளும்படி வளர்ந்து வந்தனன். அப்போது, சுநந்தைக்கும் கருப்பமுண்டாகிப் பத்துமாதம் நிறைந்தபின்பு, புத்திரனைப் பிரசவியாமல் ஓர் மாம்சபிண்டத்தைப் பெற்றனள். அரசன் அது கண்டு துக்கிக்க, உடனே ஆகாயத்திருந்து ஓர் அசரீரிவாக்குத் தோன்றி, அரசனைநோக்கி ஓ பூபதிகுலமணித் தீபமே, நீ விசனித்தலொழிந்திடுக, உனக்கு ஒன்பது மக்கள் உண்டாகும் என்றது. அரசன் பின்னும் விசனம் தீராதவனாய் வருந்துகையில், ராக்ஷசனென்னும் மந்திரி சிறிது ஆலோசித்து, அம்மாமிசபிண்டத்தை ஒன்பது துண்டமாக்கி ஒன்பது கும்பங்களில் தைலமிட்டு வைத்துப் பாதுகாத்தனன். சிலகாலத்துள் அத்தைலகும்பங்கள் ஒன்பதும் உடைந்து அவற்றினின்று ஒன்பது புத்திரர்கள் உதயமாயினர். அப்புத்திரர்களுக்கு நரபதி ஜாதகர்மாதிச் சடங்குகளெல்லாம்செய்து மிக்கமகிழ்ச்சியோடு வளர்த்து வருகையில், அவர்களும் தக்க பிராயத்தில் அஸ்திரசஸ்திராதி ஆயுதப்பயிற்சியில் வல்லவராகிப் பகைவரை வெல்லும்பராக்கிரமமுடையவராயினர்.

இவ்வாறு புத்திரர்கள் வளர்ந்து யௌவன தசையையடைந்து பராக்கிரமசாலிகளாயிருப்பதைக் கண்டு, அரசன் தன் மந்திரிகளையும் புத்திரர்களையும் தன்னிடம் வரவழைத்துப், பின் வருமாறு சொல்லலுற்றனன். "என் புதல்வர் ஒன்பதுபேர்களில் ஒருவனை அரச

னுக்கி யான் கானகம் சென்று தவஞ்செய்து நற்கதியையடைய விரும்புகின்றேன். ஒன்பது பேர்களில் எவரை அரசனுக்குதல் முறைமை யென்று நீங்கள் ஆலோசித்துச் சொல்லவேண்டும். மௌரியனைச் சேனாபதியாக நியமித்தல் வேண்டும். அவ்வுத்தியோகத்தைப் பரித்தற்கு வேண்டும் சௌரியம் அவனுக்குள்ளது நீங்கள் அறிவீரன்றோ?" என்று கூறினான்.

அதுகேட்டு மௌரியனும் பின்வருமாறு ஆலோசிக்கலானான். "ஆகா! என்ன கஷ்டம்! அரசன் என்னை தாசியகர்மத்துக்கு நியமிக்கக் காரணமென்ன? உண்மையே, யான் சூத்திரஸ்திரீயின் வயிற்றிற்பிறந்ததனால் எனக்குக் குலச்சிறப்பில்லை. ஆயினும், நான் ஜ்யேஷ்டபுத்திரனல்லவோ? நான் இந்த தாசிய வேலையை சுவீகரித்தால் என்னைக்கண்டோர் நகையார்களோ? அரசனுக்கு என்பால் அன்பில்லாமையினாலன்றோ இவ்வாறு கருதினன். எனக்கு ராஜத்துவம் வேண்டுமென்னும் ஆசையில்லை. என் ஜாதி இழிந்த ஜாதியே யாயினும், நான் ராஜபீஜமாதவின் தாசியத்துவத்தையடைய ஒருநாளும் பொருந்தேன். இப்பெரும்புவியில் எவ்விடத்தாயினும் ஒரு சிறு நாடேனும் எனக்குக் கொடுத்தல் வேண்டுமென்று தோன்றவில்லையே. இது அரசன் தானே தன் சுயபுத்தியாற் கருதியதாகத் தோன்றவில்லை. புத்திரர்களோ, மந்திரிமார்களோ, அரசனுக்கு என்விஷயமாகத் துர்ப்போதனை செய்திருக்கின்றனரென்பதிற் சந்தேகமில்லை. ஆயினும், இதற்குப் பிரதி நான் செய்யாமல் விடுவேனோ? இருக்கட்டும். அரசன் மக்களுக்குள்ளே பிணக்குண்டாக்கிக் கலகம் மூட்டுகிறேன்." என்றாலோசித்தனன். இவ்வாறு தனக்குட்டானே ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டு அரசனை நோக்கி, "தந்தையே, தாங்களேன் பலவாறு கவலைப்படுகின்றீர்கள்? ஒன்பது பேர்களில் ஒருவனை அரசனாக நியமித்து, மற்றவர்களை தகுதி;" யென்ன, அரசன், "அது நியாயமன்று; அவர்களுள் பரஸ்பரம் வைஷமியம் உண்டாகும்" என்றனன். அப்போது ராக்ஷசனென்னும் மந்திரி அரசனை நோக்கி, "ஒன்று செய்தல் உத்தமம். இராச்சியத்தை ஒன்பது பாகமாக்கி ஒவ்வொரு புத்திரனுக்கும் ஒவ்வொரு பாகத்தைக் கொடுத்தருள்வாயாக" என்றனன். அப்போது மௌரியன் 'சுவர்க்கத்துக்குச் சமானமாகிய இந்நகரைப் பெறுதற்குரியார் எவர்' என்றனன். ராக்ஷசன் அதைக் கேட்டு, "ஏது வெள்ளாட்டி மகனாகிய இவன் ராஜபுத்திரர்களுக்குள்ளே பகை மூட்டா நின்றான். அதற்குச் சந்தேகமில்லை. பலமனைவிகளை விவாகம் செய்தல்போலக் கெடுதியானது மற்றொன்று மில்லை. ஆயினும், என் ஜீவனுள்ளவரையில் தாசி புத்திரனாகிய இவன் புனை சுருட்டுகள் பலிக்கவொட்டுவேனோ?" என்றுகருதி அதிகோபிதனாய் அரசகுமாரர்களை நோக்கி, "ஓ ராஜகுமாரர்களே, உங்களுக்கு நன்மையான தொன்றைச் சொல்லுகின்றேன் கேளுங்கள். 'தந்தை சொன்மிக்க மந்திரமில்லை' யென்ற வேதவாக்கியத்தினாலே, தந்தை சொல்லைத் தட்டி நடத்தல் முறையன்று. இப்புஷ்பபுரம்போல எழிலும் வளமும் அமைந்த வேறு எட்டு நகரங்களை யானுங்கட்குச் சமைத்துத் தருவேன். அரசனும் மற்றுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் ஏற்றத்தாழ்வின்றிச் சமானமாகப் பகிர்ந்து கொடுப்பன்; நீங்கள் பிணக்கம் கொள்ளாதீர்கள்" என்றனன். இவ்வாறு, ராக்ஷசன் சொல்லியபோது மௌரியன் புன்னகைசெய்து "ராக்ஷசன் பேச்சை நீங்கள் நம்பவேண்டாம். இப்புட்பபுரத்துக்குத் தல்லியமானதோர் நகரத்தைச் சமைத்தல் எவர்க்கும் ஆகாதகாரியம். பாகசாசனனது இராஜதானியாகிய அமராவதியும் இதற்கு நிகரன்றே" என்றனன். அதுகேட்டுக் குமாரர்கள் யாவரும் "இந்நகர் எனக்குத்தான் இந்நகர் தனக்குத்தான்" என்று விவாதித்து, அரசன் தமக்கதைத் தாராவிடின், கான

கின்றோம்; இவ்வரசும் நாடும் எமக்குவேண்டாமென்றனர்.

அப்போது, முராசுதன் அரசனைநோக்கி, "ஐய, அங்ஙனமாயின் புத்திரரெல்லாரையும் பொதுவாக இராஜ்யத்துக்குப் புரவலர்களாக நியமிக்குக." என்ன, அரசன், "அவ்வாறு செய்தல் பிழையாகும். ஒருவனேயன்றிப் பல பேர்கள் புவிக்கு நாயகராயின் ராஜ்ய காரியங்களில் ஒவ்வொருவனுக்கும் உபேக்ஷையுண்டாகிச் செங்கோல் செல்லாது குடிகளுக்கு சௌக்கியக் குறைவுண்டாகும். ஆதலின், ஒன்று செய்க; ஒவ்வொரு சுதனும் ஒவ்வொரு வருஷமாக இந்நாட்டை ஆண்டுவருக; அதுவேநல்லது. அல்லாவிடில் கலகத்துக்கு ஆஸ்பதமாகும். என் சிற்றறிவுக்குத்தோற்றியதனைச் சொல்லினேன்." என்றனன்.

அரசன் வார்த்தையைக் கேட்டவளவில், மந்திரிகளெல்லாம் மனந்தெளிந்தனர். மௌரியனோ அப்போதும் சும்மாவிருக்கவில்லை. "ஆயினும் இவ்வொன்பதுபேர்களில் ராஜ்யத்தை முதலில் ஆளத்தொடங்குபவன் யாவன்?" என்றனன். உடனே, ராஜபுத்திரர்கள் எல்லாரும் ஒருபோலே 'இராஜத்வம் எனக்கு முதலிற் கிடையாவிடில் வனம்போய்விடுவேன்' என்று தனித்தனியே கூறினர். மௌரியன் வார்த்தையைக்கேட்டு ராஜபுத்திரர் மதியில்லாமல் கலகிப்பதைக்கண்டு ராக்ஷசன் மிகவும் வருத்தமுற்றுப், பின்பு மிக நயத்தோடு அவர்களை நோக்கிச் சொல்வானாயினன்: ஏ ராஜகுமாரர்களே, நீங்கள் இம்மௌரியன்வார்த்தையைக் கேளாதீர்கள்; அவன் உங்களுக்குள் கலகம் விளைக்கப்பார்க்கின்றான். உங்களிடத்து நேசமுள்ள பந்து ஜனங்கள் சொல்லும் வார்த்தையை அநுசரித்து இராஜ்யத்தைக் கைக்கொண்டு பரிபாலித்து வாருங்கள். உங்கள் பிதாவாகிய அரசன் அபிமதத்தையுணர்ந்து அவ்வாறே நடந்து கொள்ளுங்கள். உங்களுக்கு மேன்மேலும் சிரேயஸ்ஸுண்டா முறையும் நயத்தோடு வற்புறுத்திச் சொல்லிய காலத்தில், அரசகுமாரர்களும் கடைசியில் ஒருவாறு சம்மதித்தனர். அரசனும் மனமகிழ்ச்சியோடு புத்திரருக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து இராஜ்யத்தை ஒன்பதுபேரும் முறையே ஆண்டுவரும்படிச்செய்து, மௌரியனையும் முன் கருதியபடியே சேனாபதியாக நியமித்தனன். அன்றியும்மௌரியன் தன்புத்திரர்களுக்குள்ளே கலகம் மூட்டுவான் என்னும் சந்தேகத்தினால் அவன் சர்ப்பனைகள் பலிக்காமற்போகும் பொருட்டு, ராக்ஷசன் முதலான தனது நன்மந்திரிகளையே தன் புத்திரர்களுக்கும் மந்திரிகளாயிருந்து வரும்படி நியமித்தனன். இவ்வாறு ராஜ்யத்தைப் புத்திரர் வசத்தில் ஒப்பித்து அரசன் எண்ணியவாறு கானகம் செல்லப்புறப்பட்டமாத்திரத்தில், புரஜனங்களெல்லோரும் வேண்டிக்கொண்டதனால், அவ்வெண்ணத்தை மாற்றி நகரின்கண்ணே இருந்து வந்தனன்.

தாத்தா.—இது சரித்திரவிஷயம் ஆனதினாலே கொஞ்சம் காலவரலாறும் தெரிந்திருத்தல் அவசியம். இந்த நந்தராஜன் எந்தக் காலத்தில் இருந்தவன்? இது மஹாபாரதத்துக்கு முன்னோ பின்னோ?

ருக்மணி.—இது மகாபாரதத்துக்கு நெடுங்காலம் பின்பு. மஹாபாரதம் கலியுகாரம்பத்தில் நடந்ததாகச் சொல்லப்படுகின்றது. மேற்குத்திசையாராகிய சரித்திரக்காரர்கள் பாரதயுத்தம் கி. மு. 1400 வருஷங்களுக்குமுன் நடந்ததாகச்சொல்லுவர். இதற்கு நெடுநாளைக்குப்பின் கி. மு. ஆறாவது ஐந்தாவது நூற்றாண்டுகளில் தக்ஷகவம்சத்தார் மகததேசத்தைச் செயித்து ஆண்டுவந்ததாகச் சொல்வார்கள். இந்தத் தக்ஷகவம்சத்தில் கடைசியான அரசன்தான் நந்தராஜன் என்பவன். இவன் கி. மு. 316-ம் வருஷத்தில் தன் பேரனாகிய சந்திரகுப்தனால் கொலை

தாத்.—சந்திரகுப்தன் நந்தராஜாவுக்குப் பேரனு. அந்தவிருத்தாந்தம் இனிமேல் வரும்போல் இருக்கிறது.

ருக்.—ஆமாம். இந்நூலிற் சொல்லியிருக்கிற படி சந்திரகுப்தன் மௌரியனுக்குப் பிள்ளையும் நந்தனுக்குப் பேரனும் ஆகவேண்டும். மௌரியபுத்திரனுதலால் இவன் சந்ததிக்கு மௌரிய சந்ததியென்று பெயராயிற்றென்று விளங்கும். ஆயினும் சரித்திரத்தில் இவனை நந்தனுக்கே ஒரு நாவித ஸ்திரீயின் வயிற்றிற் பிறந்த புத்திரனுகச் சொல்லியிருக்கின்றது. இது அவ்வளவு யுக்திக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. இங்கு தகப்பனுக்கும் பிள்ளைக்கும் தடுமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. இன்னொரு சரித்திரக்காரர் நந்தராஜனையே சூத்திரராஜனுகச் சொல்லுகின்றனர். இந்த முறை விவரமும் ஜாதி விவரமும் எவ்வாருயினும் சந்திரகுப்தன் காலம் கி. மு. 315 முதல் 291 வரையில் என்று கொள்ளத்தக்கது. இக்காலத்தில் கிரேக்கர், முதலில் அவர்களுக்குள் மகா யுத்தவீரனுகிய மகா அலெக்ஸாந்தரோடும், பின்பு அவன் சேனுபதியாகிய ஸெல்யூகஸோடும் சேர்ந்து இந்தியாவில் படையெடுத்துச் சந்திரகுப்தனேடு போர்புரிந்ததாகச் சொல்லியிருத்தலினுலே சந்திரகுப்தன் காலம் கிரேக்கர் சரித்திரங்களால் நிர்ணயிக்கப்படுகின்றது.

தாத்.—நந்தகுமாரர்களுடைய பிறப்பு பாரத கதையில் துரியோதனுதியர் பிறப்புப்போல விசித்திரமாயிருக்கின்றதே.

ருக்.—இவ்விருத்தாந்தம் கவி பாரதகதையிலிருந்து எடுத்துக்கொண்டதாயிருக்கலாம். ராக்ஷசன் ஒன்பது துண்டமாக்கி வளர்த்தற்குக் காரணம் முனிவரன் ஒன்பதுமக்கள் பிறப்பர் என்று சொல்லிச் சென்றதற்கிசையச் செய்தனன் போலும். இங்குகதையை நிறுத்துவோம்.

எஸ். முத்து ஐயர், பி. எ.

THE CORONATION OF THE KING-EMPEROR.

## எட்வர்ட் அரசரான இந்திய சக்ரவர்த்தியின் மகுடாபிஷேகம்.

---

ஸ்ரீ இராஜ சக்கிரவர்த்தியின் மகுடாபிஷேகம்.

நமது விக்டோரியா மஹாராணியவர்கள் 1837-வருடம் ஜூன் மாதம் 20 ந்தேதி யன்று, தமது பெரியப்பராகிய வில்லியம் அரசர்க்குப் பின் திருமுடியைப் பெற்று, மறுவருடம் ஜூன் மாதம் 28-ம் தேதி பட்டாபிஷேகம் செய்யப் பெற்ற விவரம் அவரது சரித்திரத்தை படிப்பவர்களுக்கு நன்கு தெரியவரும். அம்மகுடாபிஷேக காலத்தில் இலண்டன் நகரத்திலும், இங்கிலாந்து தேசத்தில் மற்றெவ்விடங்களிலும், ஜனங்கள் கொண்டாடிய மஹோற்சவங்களும் அடைந்த குதூகலங்களும், அச்சரித்திர வாயிலாகவே தெரியவரும். மஹாராணியவர்கள், வண்மையினுலும், பெருமையினுலும், செங்கோல் முறைமையினுலும், தமக்கு நிகரானேர் அரசகுலத்தில் இல்லர் என்னும் கியாதியைப் பெற்று, அறுபத்து நான்கு வருடம் அரசு புரிந்து, சென்ற ஜனவரி மாதம் 22-ம் தேதி மாலை ஏழுமணிக்கு, தமது அரசும் செல்வமும் புத்திரருக்கு அளித்து தேக வியோகம் ஆனவிஷயமும் யாவருந் தெரிந்ததே.

தமது தாயாரின் ஒப்பற்ற அரசைப் பெற்ற நமது மாட்சிமைதங்கிய ஏழாம் எட்வர்ட் என்னும் இராஜ சக்கிரவர்த்திக்கு, இன்னும் மகுடாபிஷேகம் ஆகவில்லை. அம்மகோற்சவம் அடுத்த ஜூன் மாதம் இருபத்தாறும் தேதி நடத்தப்படும் என்று பிரகடனம் செய்யப்பட்டிருக்கின்றது. இவ்விஷயமாகச் சென்னைபுரியில், சென்ற டிசம்பர் மாதம் ஓர் பெரிய சபை கூடி, அச்சபைக்கு நமது பெருமை தங்கிய கவர்னர் அவர்களாகிய அம்தில் பிரபுவே அக்கிராசனுதிபதியாக வீற்றிருந்தனர். அச்சபையின் கண்ணே தீர்மானிக்கப்பட்ட விஷயம் யாதெனில், இச்சென்னை நகரிலுள்ள ஹிந்து

மஹமதியாதி பன்மதஸ்தரும் ஆகிய மாசனங்கள் ஒருங்கு சேர்ந்து, வருகிற பட்டாபிஷேக மகோற்சவ காலத்தில், நமது மாட்சிமை பெற்ற சக்கிரவர்த்தி அவர்களுக்கு நமது இராஜபக்தியையும் விசுவாசத்தையும் தெரிவித்து, சக்கிரவர்த்தி அவர்களுக்கு நீடூழி வாழ்வும், நிறைந்த சம்பத்தும், வெற்றியும், மேன்மையும், ஓங்குமாறு சுபம் கூறி ஒரு நிருபம் எழிதி, அதனைத் தகுந்த பெட்டகத்தில் வைத்து அனுப்புதல் வேண்டுமென்றும், அச்செலவுகளுக்காகவேண்டிவரும் சுமார் 6,000 ரூபாய் தொகையை, சீக்கிரத்தில் சேகரித்தல் வேண்டும் என்றுமாம். இத்தனைபெரிய மஹாஜனங்களுக்குள்ளே இச்சிறுதொகை சேர்ப்பது ஒரு விஷயம் அல்ல. சென்னை நகரத்தார் சிறிது முயற்சி எடுத்துக்கொள்ளின் இக்காரியம் அதி சீக்கிரத்தில் நிறைவேறுதற்கு ஐயமில்லை.

நிற்க, அச்சபையின்கண்ணே அனேகர் உபந்நியாசித்த உபந்நியாசங்களில் முந்தினதாகிய கவர்னர் அவர்களது உபந்நியாசத்தை இங்கு மொழிபெயர்த்துக் காட்டுகின்றோம்.

"சீமாட்டிகளே, சீமான்களே! இந்தச் சபையின் உத்தேசம் இன்னதென்று நமது ஷரிப் அவர்களால் அவரது விளம்பரத்தாலும், அவர் பிராரம்பத்திற் சொல்லிய வார்த்தைகளாலும், உங்களுக்குப் போதுமான வரையில் விசதமாய் இருக்கின்றது. ஆதலின் இனி உங்களுக்கு எடுத்துச் சொல்லப் போகா நிற்கும் கனவான்களை முன்னிட்டு, அவ்விஷயங்களைப்பற்றி யான் சொல்லத்தேவையில்லை. யானின்று உங்கள் மத்தியில் நிற்பது இராஜ சக்கிரவர்த்தியின் பிரதிநிதி என்னும் நிலைமையினன்று. இச்சென்னைமாபுரியின் புரஜனங்களில் ஒருவன் என்னும் நிலைமையினுலும். யானிங்கு வந்ததின் காரணம் என்னெனில், யான் சென்னைக்குவந்தநாள் முதல், உங்களோடென்னைச் சமநிலையான புரஜனங்களில் ஒருவனாக நீங்கள் மதிக்கவிரும்பியதனுலாகும். இவ்வாறு உங்கள் சுக துக்கங்கள் என்னதென்றும், நீங்கள் மேற்கொள்ளுங்காரியங்களில் என்னையும் சேர்த்தல் எனக்கு மிசவும் கௌரவமென்றும், மகிழ்ச்சியைத் தருவதென்றும், உங்களுக்குச் சிறிதளவேனும் நிருபிக்கக் கோருகின்றேன். இச்சந்தர்ப்பத்தில் என்னிலும் நீண்டகாலமாய் இங்கு இருந்து வருகின்ற புரஜனங்களுக்கு உங்களை முதலில் நோக்கிக் கூறும்படியான உரிமையுள்ளது. ஆயினும், மேலே தீர்மானிக்கப்போகும் பல விஷயங்களைப்பற்றிப் பேசுகின்றவர்களை யான் அழைத்துப் பேசும்படி கேட்டுக்கொள்ளுதற்கு முன், ஒன்றிரண்டு எனக்குத்தோற்றிய சங்கதிகளைச் சொல்லுதற்கு இடம் கொடுப்பீர்கள், என்று நம்புகின்றேன்.

இச்சென்னைமாநகரம் தான் மேற்கொண்ட இராஜபக்தி சூசக காரியத்தில் நாம் விரும்புமளவும் அவ்வளவு காரிய சித்தியைப் பெறவில்லையென்று யான் உமக்கு நினைப்பு மூட்டுவேனுயின், நீங்கள் அதனை விபரீதமாகக் கொள்ளீரென்று நம்புகிறேன். அவ்வாறு காரியசித்தி அடையாமற் போனதற்குக் காரணம், ஒருவேளை, நாம் அதிக மேன்மையை விரும்பி நமக்குச் செய்தற்கரிய காரியங்களை செய்ய மேற்கொண்டதாயிருக்கலாம். இப்போது நமக்கு ஒருவிதமான கஷ்டமும் இல்லாமல் சுலபமாக நமது இராஜபத்தியைத் தெரிவித்தற்கு ஓர் சமயம் வாய்த்திருக்கின்றது. இதைச் செய்யலாமா அதைச் செய்யலாமா என்று பற்பல செய்கைகளில் ஒன்றை நாம் தெரிந்தெடுக்க வேண்டியதில்லை. ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கும் வெவ்வேறு பின்னுபிப்பிராயங்களையும், விருப்பங்களையும், வேற்றுமை நீக்கி ஒருமைப்படுத்தவேண்டியதும் இல்லை. அல்லது, பெருந்தொகையான பணத்தைச் சேகரிக்கவேண்டுமென்பதும் இல்லை. நாமிப்போது செய்யப்போவது, நமது மாட்சிமை தங்கிய இராஜ சக்கிரவர்த்திக்கு நமது பத்தி நிலைமையையும், மனப்பூர்வமாக நன்மையைக்கோரிய பிரார்த்தனைகளையும்,

அவர் பட்டாபிஷேக சமயத்தில் வழக்கப்படி அனுப்பும் பத்திரிகா பாவமாகத் தெரிவித்தலாகிய இச்சொற்ப விஷயமே. சக்கிரவர்த்தியை அச்சோபன காலத்தில் சத்கரிப்பது இந்நகரில் உள்ள ஜனங்கள் எல்லாருக்கும் ஒருங்கேயுள்ள விருப்பமாகும். அவ்வாழ்த்தை எவ்விதமாகச் சமர்ப்பிப்பது என்னும் விஷயத்தைப்பற்றி எவ்வாற்றானும் பின்னபிப்பிராயங்கள் உண்டாகச் சாத்தியமில்லை. நாம் செய்யவேண்டுவ தென்னவென்றால், நமது பத்திரிகையின் வாக்சாலமும் பெட்டகத்தின் அழகும், இம்மகாராச்சியத்திலுள்ள நகரங்களில், நமது சென்னைமாநகரம் பெற்றிருக்கும் உயர்ந்த நிலைமைக்குத் தக்கபடி இருக்குமாறு செய்வதொன்றுதான். நம்மைப்போலும் தத்தம் இராஜபக்தியையும் விசுவாசத்தையும் தெரிவித்து சக்கிரவர்த்தியின் திருவடியில் ஒவ்வொருவராலும் ஒவ்வொரு சாசனம் வைக்கப்படுமென்பதில் சந்தேகமில்லை.

---

VALUABLE ALPHABETICAL MAXIMS.

## அக்ஷரக்கிரமமான சிறந்த நீதிகள்.

இந்நீதிகள் இங்கிலீஷ் பாஷைக்குரிய இருபத்தாறு அக்ஷரங்களின் கிரமப்படி கோக்கப் ட்டவை. இவை பாரன் ராத்ஸ்சைல்ட் (Baron Rothschild) என்னும் செல்வப்பிரபுவால் தெரிந்து சேர்க்கப்பட்டவை என்பர். இவை உண்மையாகவே உயர்ந்த நீதிகளை அடக்கிக்கொண்டிருத்தலின் இவற்றை அடியில் தமிழெழுத்து முறைப்படி மொழிபெயர்க்கின்றோம்.

1. அடையவெண்ணி முடியத்துணிக.
2. அற்பத்தொழிலும் அசட்டை செய்யற்க.
3. இடையூறெல்லாம் உடைதரப்பொருக.
4. ஊக்கம்கைவிட் டாக்கமிழவேல்.
5. எல்லார்பாலும் இன்மொழிகூறுக.
6. எனைத்தினைப்பெறினும் தினைத்துணைப் பொய்யேல்.
7. ஒழிந்தசமயத் துற்றதுசெய்க.
8. கசடுறுசிந்தை கருதாதொழிக.
9. கடனைவாங்கின் உடனேதீர்க்குக.
10. காமாதிகளைக் காத்தடக்குகவே.
11. தக்கன துணிந்து தகாதன அஞ்சுக.
12. தந்தைதாய்ப் பேணிப் புந்தியைக் கொள்க.
13. திரிகரணசுத்தியை ஒருவாதுறுக.
14. தீயோரினத்தைச் சேராதொழிக.
15. துயர்வரினூக்கத்தொடு பொருத்திடுக.
16. துறக்கினும்கைப்பொருள் துறவேல் கொள்கையை.
17. நண்பன்சொல்லிற் கம்பமுறற்க.
18. நல்லாருறவை யல்லாதொழிக.
19. நன்னடக்கையினில் மன்னிஒழுகுக.
20. நெறியல்லாதன மருவுதலொழிக.
21. நெறியாமதனைக் குறியாச்செய்க.
22. பல்லோர்நேசம் பொல்லாங்காமே.
23. மதுவர்க்கங்களை மனத்தினும்நினையேல்.
24. மற்றவர்பெயரை வசையாற்கெடற்க.
25. மேற்கொள்வினையை விரைவில்முடிக்க.
26. வெளிவேடத்தை விடுக்குகமுற்றும்.

---

ON SLEEPLESSNESS AND ITS REMEDIES.

## தூக்கம்பிடியாமையும் அதற்கு நிவர்த்தியும்.

சிற்சிலகாலங்களில் நம்மில் ஒவ்வொருவரும் ரக்கம்பிடியாமல் வருந்தியிருக்கலாம். வியாதியினாலோ அல்லது மனோவிசாரத்தாலோ அல்லது வேறு காரணங்களாலோ தூக்கம்பிடியாமல், சிந்தையில் வேண்டாததெல்லாம் சிந்தித்துத் தலைக்குடைச்சலும் வலியுமுண்டாக வருந்துவதுண்டு. "அநந்தலாடேல்" என்று ளவையார் சொல்லியிருக்கிறபடி அதிக நித்திரையைச்செய்தல் கெடுதியாயினும், போதாத தூக்கமில்லாமை அதிலும் கெடுதியா

கும். சாப்பாடில்லாமல் சிறிதுகாலம் இருந்தாலும் இருக்கலாம்; தூக்கத்தைத் தவிர்த்திருத்தல் மிகவும் கெடுதியாதலின், நல்ல தூக்கத்தைச் சம்பாதிக்க ஏதாவது உபாயமொன்றைத் தேடவேண்டியதவசியம்.

பலபேர் பல உபாயங்களைச்சொல்லுவார்கள். ஒருவர், படுக்கப்போமுன் சிறிது வெந்நீரை வாயில்வைத்துச் சீப்பிக்குடித்தால் நல்ல உறக்கமுண்டாகுமென்கிறார். இன்னொருவர், படுக்கைக்குப்போகுமுன் வெங்காயத்தை வதக்கித்தின்றால் நல்லதூக்கமுண்டாகுமென்கிறார். இன்னொருவர் படுக்கப்போகுமுன் ஒரு பஞ்சபாத்திரம் பச்சைதண்ணீரைச் சாப்பிட்டுக் கொஞ்சம் முகத்திலும் தலையிலும் பொட்டிலும் தண்ணீர்விட்டலம்பித் தண்ணீரில் துணியைநனைத்துப்பிழிந்து அவ்வீரத்துணியால் உடம்பெங்கும் நன்றாகத்தேய்த்துத் துவட்டிப் பின்புஉலர்ந்ததுணிகொண்டு துவட்டிவிட்டுக் கையிலேயும் தேய்த்துவிட்டுப் படுத்துக்கொண்டால் நல்லதூக்கமுண்டாகுமென்கிறார். இது அவர் பலசமயங்களில் தாமேயும் செய்து பிறருக்கும் செய்வித்துப் பயன்கண்டிருப்பதாகச் சொல்லுகிறார். இன்னொருவர் ஒருயுக்தி சொலுகிறார். அதாவது ஏ, இ, ஐ, ஓ, என்னும் உயிரெழுத்துக்களை மெதுவாகச் சொல்லிக்கொண்டேயிருக்கத் தூக்கம் தன்னையறியாமல்வந்துவிடுமாம். இந்த யுக்தியைப் பரிக்ஷித்தறிந்தவர்கள் அது உண்மையென்றே சொல்லுகிறார்கள். இன்னொருவர் தூக்கம் பிடிக்காமற்போனால் மனசின்யாதேனும் கட்டிடத்தைக்கட்டுவதாகப் பாவனைசெய்து 'பிளான்'போட நித்திரைவருமென்கிறார். சிலருக்கு, முக்கியமாகப் பள்ளிப்பிள்ளைகளுக்கு இந்த யுத்திகளும் மருந்தும் வேண்டியதேயில்லை. புஸ்தகத்தைக் கையிலெடுத்தாற்போதும். மூடினகண்ணும் ஆடினதலையுமாய் உடனே நித்திராதேவி பிரசன்னமாய்விடுவாள். அப்புத்தகம் 'ரினல் டெழுதிய நாவல்' மாதிரி விநோதார்த்தமான கட்டுக்கதைகளாயிருந்தால்போதாது. சிறிது உட்புகுந்து கருத்தைச் செலுத்திப்படிக்கவேண்டிய பாடபுத்தகமாயிருத்தல்வேண்டும்.

இனிச்சிலர் நித்திரையுண்டாதற்காகச் சிற்சில மதியீனமானகாரியங்களைச் செய்கின்றார்கள். அவற்றாற்கெடுதியேயன்றி நன்மையுண்டாகாது. சிலர் வயிறாரவுண்டால் நித்திரையுண்டாகுமென்றெண்ணி விலாப்புடைக்கத் தின்றுவிட்டுப் படுத்துக்கொள்வார்கள். ஆனால் அவர்களுக்குத் துர்க்கனவு உண்டாகி நல்ல தூக்கம்பிடியாது; புரண்டு அருண்டு ஐயோ ஐயோவென்றலறிக்கொண்டு எழுந்திருப்பார்கள். அமுக்குப்பிசாசென்றொன்று எழுந்திருக்கவொட்டாமல் மார்பிலேறி அமுக்குமென்னியைப்பிடிப்பதும் இப்படிப்பட்டவர்களைத்தான். மிதமான ஆகாரத்தைப் புசிப்பதுடன் புசித்து இரண்டுமணிக்குள்ளாக நித்திரை கொள்ளாமலும் இருக்கவேண்டும். படுக்கைக்கு ஒருமணிநேரத்துக்குள்ளாகச் சிற்றுண்டிமுதலிய ஒருவகையான பதார்த்தமும் உட்கொள்ளக்கூடாது.

சிலர் தூக்கம்பிடிப்பதற்காக அபின்முதலிய லாகரிவஸ்துக்களை உபயோகிப்பார்கள். அப்பொருள்களால் உடம்புக்கு மிகவும் கெடுதியுண்டாகும். இவை ஒருதரம் இரண்டுதரம் எப்போதாவது சாப்பிட்டாற்கூட உடம்பைக் கெடுத்துவிடும். நியதமாக உட்கொள்வோமாயின் அகாலமரணத்தைக் கொண்டுவந்துவிடும். இந்தவழியைநாம் ஒருபோதும் தேடக்கூடாது.

சிலர்காப்பியும் தேயிலையும் இராமாறு சாப்பிடுவார்கள். இவற்றை உடம்புக்கு அநுகூலமாகச்சிலரெண்ணினும், நாளடைவில் இவை உடம்பைக் கெடுத்துவிடும். தேகத்திலுள்ள நரம்புகளுக்கும் மூளைக்கும் துர்ப்பலத்தையுண்டுபண்ணும். இவற்றைப் படுக்குமுன் புசித்தல் கூடாது.

தூக்கம் வாராமைக்குக் காரணம் யாது? வைத்தியர் இவ்விஷயத்தைப் பற்றிச்சொல்லு

வதென்னெனில், மூளையில் இரத்தம் மூண்டு அம்மூளையை அமுத்துவதனல் தூக்கம்வராமல் விழித்திருக்கும்படிச் செய்கின்றதென்பது. அவ்விரத்தம் அங்குவிட்டுத் தேகத்தின் மற்றவிடங்களில் சென்று சமானமாகப்பாவினல் அந்த சங்கடம் போய்விடுமென்கிருர்கள்.

பகற்காலத்தில் மெய்வருந்த உழைத்து வேலைசெய்தால் இராத்திரி அயர்ந்து நித்திரை தடையின்றியுண்டாகும். அன்றியும் நாமுட்கொள்ளுமாகாரம் சுலபமாக ஜீர்ணமாவதாய் நாமதனை மிதமாகப்புசித்தலும் வேண்டும். வயிருரவுண்டால் நல்லதூக்க முண்டாமென்றெண்ணுவது முற்றிலும் பிசகு. மிதமிஞ்சின போஜனத்தால் தூக்கம் கெட்டுப்போமென்று மேலே காட்டினேமல்லவா.

"மனக்கவலை பலக்குறைச்சல்" என்றபடி மனக்கவலையினல் பலம்குறைதல் அன்றித் தூக்கமும் பங்கமாகும். வித்தையுள்ளவன் தூங்கான் விசாரமுள்ளவன் தூங்கான் அர்த்தமுள்ளவன் தூங்கான் என்று வழக்கத்திற் சொல்லுகிறபடி விசாரமுள்ளவர்களுக்குத் தூக்கமுண்டாகாது. இவ்விசாரமுற்றவர்களுக்கு அவ்விசாரமொழிந்தாலொழிய வேறு வகையால் தூக்கமுண்டாகாது.

ஆகவே பகற்காலத்தில் மெய்வருந்த வேலை செய்து மிதமான ஆகாரங்களை உட்கொண்டு விசார மொழிந்திருத்தலே இராக்காலத்தில் அயர்ந்து தூங்கிச்சுகித்தற்கு முக்கியகாரணமாகும். அதுவே மற்றெல்லாச் சாதகங்களிலும் சிறந்த சாதகமுமாகும்.

---

## SOME ACCOUNT OF MANIPUR.

## மணிபுர ராஜ்யம்.

மணிபுரம் என்பது அஸ்ஸாமுக்கும் பர்மாவுக்கும் மத்தியில் உள்ள ஓர் சிறுநாடு. அது நாற்புறமும் மலைகளாற் சூழப்பட்டு மத்தியில் விசாலமான பள்ளத்தாக்கொன்றையுடையது. இதில் நாகரிகமற்ற வெவ்வேறு சாதியார்கள் வாசம்பண்ணுகிருர்கள். இதன் சீதோஷ்ண ஸ்திதி ஆரோக்கியமானதும் பூமி மிகவும் சாரமுள்ளது மாகும். இந்தியா துரைத்தனத்தாருக்கு உட்பட்ட ஒரு சுதேச ராஜாவால் ஆண்டு வரப்படுகின்றது. முக்கியமானபட்டணம் மணிபுரம் என்பது.

பத்து வருடங்களுக்கு முன்னே இதன் நிலைமை மிகவும் கேவலமாயிருந்தது. ஜனங்கள் ஒரு சாதியாரோ டொருசாதியார் இடைவிடாமல் சண்டை செய்து நிலைக்கடையான ஜீவனமில்லாமல் வேட்டையாடி ஜீவனம் செய்துவந்தார்கள். தேசத்திற் பெரும்பான்மையும் காடுகளடர்ந்து பலவிதமான வனவிலங்குகளால் நிரம்பியிருந்தது. வர்த்தங்களுக்கு ஏற்றபடி இவ்விராச்சியம் அமைந்திருப்பினும் துரைத்தனம் மில்லாமையினலே வர்த்தகம் விசேஷமாக விருத்தியாதற்கிடமில்லாமலிருந்தது. அக்காலத்தில் ஜனங்களுக்கு சர்க்கார் வரியென்பதும் கிடையாது. பதினறு வயதுக்கு மேற்பட்ட ஆடவர்களெல்லாரும் நான்குவகுப்பாக பிரிக்கப்பட்டு ஒவ்வொருவகுப்பாரும் துரைத்தனத்தாருக்குப் பத்துநாள் மாறிமாறி வரிசையாக வேலைசெய்வது வழக்கம். சிலர் சிப்பாய்களாகவும், சிலர் உழவர்களாகவும், சிலர் கொல்லர் கருமார் முதலான வேலைக்காரர்களாகவும், இவ்வாறு நாற்பது நாளிற் பத்துநாள் துரைத்தனத்தாருக்கு வேலை செய்வார்கள். இக்காரணத்தாலும், ஒவ்வொரு குடும்பத்தாரும் அவரவர்களுக்கு வேண்டிய பதார்த்தங்களைத் தாமே உண்டு செய்துகொள்ளுதலாலும் அவர்களுக்குள்ளே கைத்தொழில்களும் வேலைப்பாடுகளும் அபிவிர்த்தியாதற்கிடமேயில்லாமலிருந்தது. ஜனங்களுக்குப் படிப்பென்பதே கிடையாது. அவர்களுடைய மனம் குருடாயிருத்தலன்றி ஒழுக்கமும் மிக்க தீயொழுக்கமாயிருந்தது. இந்தக் காட்டுமோராண்டி ஜனங்களுக்குள்ளே ஒருவன் செய்த குற்றத்தை மன்னித்தல் செய்யத்தகாத மிக்க கெட்டவழக்கமாகக் கருதப்பட்டி

ருந்தது. பழிக்குப்பழிவாங்குதல் முதற்கடமையாகவும் உத்தமமான தர்மமாகவும் எண்ணப்பட்டிருந்தது. சமசிருஷ்டியாகிய மனிதர்களைக் கொல்லுதல் ஆடு கோழிகளைக்கொல்லுதல்போல் அவ்வளவு எளிமையாகக் கருதப்பட்டிருந்தது. குடிகளது பொருளையும் பிராணனையும் பாதுகாக்கப் போலீஸ்உத்தியோகஸ்தர்களாவது, சர்க்கார்க்காடுகளில் பொருள் வரவுக்கேதுவான சீர்திருத்தங்களைச் செய்தற்கும் பாலங்கள் ரோட்டுகள் முதலான போக்குவரவுகளுக்குச் சாதகமான ஏற்பாடுகளைச் செய்தற்கும் ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளுக்குள் வித்யாபோதனைசெய்வித்தற்காகவும் தக்க ஏற்பாடுகளாவது யாது மில்லாமலிருந்தது. வர்த்தகம் என்பதே இந்நாட்டில் விசேஷமாகக்கிடையாது. ஜனத்தொகை 2,21,000 தான் இருந்தது. சர்க்கார் வரும்படியும் லக்ஷம் ரூபாய்க்கு மேல் இல்லை.

1891-ம்வருஷத்தில் லான்ஸ்டௌன் பிரபுவின் காலத்தில் இந்நாட்டின் யுவராஜா தன் தந்தையைத் தள்ளித் தான் அரசைக் கைவசப்படுத்திக்கொள்ள அப்போது அசாம்பிரதான கமீஷனராயிருந்த மிஸ்டர் க்வின்டன் என்பவர் 700-கூர்க்கப்படையோடு மணிபுரத்தில் பிரவேசித்து யுவராஜாவைச் சிறைசெய்ய முயன்றனர். அதை அறிந்து அந்த யுவராஜா அங்கிலேயர் அனேகரைச் சிறைப்பிடித்து வதைசெய்ய அக்காரணமாக அவ்விராச்சியம் அங்கிலேயர் ஆளுகையில் அன்று முதல் வைக்கப்பட்டது.

சென்ற பத்துவருஷகாலமாக அங்கிலேயர் ஆளுகையில் இந்நாட்டார் அடைந்துள்ள நன்மைகளுக்கும் அபிவிர்த்திக்கும் அளவில்லை. அநேக கெட்டவழக்கங்கள் தவிர்க்கப்பட்டு அனேக நன்மைகள் செய்யப்பட்டுள்ளன. ஜனங்கள் முன்னிலும் செவ்வையாக ஆளப்பட்டுச் செல்வமும் சுகமும் பெற்றிருக்கின்றனர். முன்னிருந்த சண்டைச்சச்சரவுகளும் இப்போதில்லை. அந்நாளிலிருந்த அக்கிரமங்களும் கொடுமைகளும் அடியோடும் நீக்கப்பட்டன. இனிமேல் ஆளுதற்குரிய இளையராஜா வெகு ஜாக்கிரதையாகக் கற்பிக்கப்பட்டு இராச்சியத்தைச் செவ்வையாக ஆளும் திறமையைப் பெற்றிருக்கின்றனன். முற்காலத்தில் வழங்கி வந்ததாகிய குடிகளிடத்து நிர்ப்பந்தப்படுத்தி வேலைவாங்கும் வழக்கம் முற்றிலும் நீங்கிவிட்டது. இப்போது அவரவர்கள் சுயேச்சையால் இஷ்டமானவேலைகளைச்செய்து நல்ல கூலிகளைப்பெற்றுக் கஷ்டமின்றிப் பிழைக்கலாயினர். அடிமைத்தனம் நீங்கிவிட்டது. ஜனங்களுக்குக் கஷ்டமில்லாமல் இலகுவாகச் செலுத்தும்படியான புதிய பத்ததியானவரிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இளைய ராஜா இன்னம் சிறிது காலத்தில் ஆளுதற்குப்போதுமான வயதையடைந்ததும் இராச்சியம் அவன் வசம் ஒப்பிக்கப்படும். சென்றமாதத்தில் நமது ராஜப்பிரதிநிதியாகிய கர்ஸன் பிரபுவவர்கள் இவ்வூருக்கு விஜயம் செய்து ஜனங்கள் அங்கிலேயர் ஆளுகையில் அடைந்த நன்மைகளையும் லாபங்களையும் அவருக்கு எடுத்து விளக்கி அவர்களுக்கு நற்புத்திமதிகளைப் போதித்தனர். யானைக்கு முன் மச்சம்போல் யுவராஜாவும் அவன் சேனாதிபதியும் அங்கிலேயரோடு பகைத்தெழுந்தது எவ்வளவு புத்தியீனம். ஆயினும் கெடுதியிலிருந்தும் சில வேளைகளில் நன்மைவிளையும் என்றபடி அவர்கள் அப்போது கலகித்தது குடிகளுக்கு மிகவுபயோகமாயிற்று.

---

## சுகுணசுந்தரம்.

---

### III

"அடி தோழிகாள்! ஸ்வயம்வரமோ சமீபிக்கின்றது. அம்பாளருளின்னமுங்காணேனே, என்ன செய்வேன். என்மனதில் குடிகொண்ட மோகனுங்கனை எப்போது காணுவேனோ! இன்னமும் மிவ்வழியே வரக்கண்டேனில்லையே! முதல் முதலில் எந்த இராஜகுமாரனை யான் இங்கு கண்ணுறுவேனோ அவனேயன்றோ வென் பிராணேசன்.

அவனை யான் காணுததற்குமுந்தி ஸ்வயம்வர மண்டபம்போக நேர்ந்தால் என்னசெய்வேன். இம்மரத்தடியிலேயே என் மேல்வஸ்திரத்தினுல் சுருக்கிட்டுத்தான் சாகநேரிடும். அல்லது ஏதேனுங் கயிறுபோன்ற பலமானக் கொடியைத்தான் கழுத்தில் சுருக்கிட்டுக்கொள்ளவேண்டும்" என, சுந்தரம் "தோழ! இதென்ன விபரீதமான வார்த்தைகளை இவள் பேசுகிருள். இன்னும் நடக்கப்போகிறதையும் பார்க்கலாம்" என, சுகுணன், "ஆம் நாமும் ஊக்கமாகவேயிருக்கவேண்டும். நீ எதிர்ப்படும் காலம் வாய்த்திருக்கின்றது" என்றுன்.

இராஜகுமாரியான சுலோசனையின் வார்த்தையைக்கேட்ட தோழிமார்க ளிருவரில் மரகதம் அவளைப்பார்த்து சொல்லுகிறதாவது: "அடி கண்மணி! ஸ்வயம்வரஞ்சமீபிக்கச் சமீபிக்க உனக்கு நாயகன் சீக்கிரத்தில் இப்பவோ, இன்னும் ஒருநொடியிலோ இவ்வழியே வரப்போகின்றுன். இடது தோளுங் கண்ணுந் துடித்ததென்றுயே அதன் பலனை சீக்கிரமாயடையப்போகின்றுய்."

சுலோசனம்.—"இவ்வழியே வருவான் வருவான் என்கிறீர்களே யொழிய என் நாதன் வருவதைக்காணேனே. நான் இப்பொழுது மடிவதைத்தான் காணப்போகின்றீர்கள். அடி! நாளையுதயத்திற்குள் ஸ்வயம்வர மண்டபம் போகவேண்டியிருக்குமே. இதற்குள் நாயகன் வருவானென்பது எனக்குத் தோன்றவில்லை. நானிப்பொழுது மேலேசொல்லியபடி மாணத்திற்கு எத்தனப்படப்போகிறேன், என் விதியும் அம்பாளனுக்கிரஹமு மிவ்வண்ணந்தான் கூட்டிமுடித்ததுபோலும்;" என்று அம்மரத்தின்மீது படர்ந்து தொங்கிக்கொண்டிருந்த குருக்கத்தியின் கொடிகளிலொன்றை சுருக்கிட்டு தன் தலையைப்புகுத்திக் கொள்ள யத்தனித்தாள். அப்பொழுதவள் தோழியர் களிருவரும் அவள் கையை கெட்டியாய்ப்பிடித்துக்கொண்டு கதறினுர்கள். சுலோசனைமனத் துணிந்து அவர்களையுமீறித் தன் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு,

"மல்லிகையே சண்பகமே மகிழ்விருேடும்யான்வளர்த்த
முல்லைகளே மாதவியே முகிபுலர்ச்சம்பங்கிகளே
மெல்லிலையதேமாவே மென்கோங்கமாதிகளோ
நல்வியலீர் நுமைப்பிரியு நான்வந்துநேர்ந்ததுவே,

பூமலர் செவ்வல்லிகளே புதியமலர்க்கழுநீரே
தாமரையே வள்ளைகளே தளநெருங்குமுற்பலமே
...மைகளே நெண்டுகளே அழகுசேர் கெண்டைகளே
...மிருந்து விளையாடு நாள்கழிந்துபோயினவே.

...னினமே தேனினமே மரகதப்புள்மேய்ந்துவரு
...னினமேகுழக்கன்றே யரியமுயற்குருளைகளே
...னிறவெள்ளோதிமமே பசியமயிற்பேடுகளே
...னிறமெங்குயிற்குலமே நீருமெனைமறப்பீரோ?

...ாழிகளேசெம்போத்தே குலவுவரிச்சிறைக்குருகே
...ழ்கினற்பயின்கிள்ளைகளே கிளற்பருதிபுட்குலமே
...ாழிகளேசாதகமே தோன்றுசகோரக்குழுவே
...முதிர்நீர்யான் பிரிந்த வருத்தமினையாதினிதே."

"...ன்தனதிஷ்டதே வதையாகிய தேவியை நோக்கி,

...விடைப்பாகரிட ...ந்துறையுமெல்லியலேமலைவரைத்த
னி...ப்பாவாய் நீ...ாழிந்த வண்ணமின்னுளவிருந்தேன்
...ச்சியேன்றனக் கொன்றுமருள்புரியாயாயினுமுன்
...த்துறையும் பெருவாழ்வையாயினுநீயுதவுகவே.

...ம்பைமடமாதர்களுமலர்மகளுங்கலைமகளு
...ம்பியநின்பேறவையினையமிலாப்புன்மையினேன்
...ம்பொருட்டென்றுயிர்துறக்கலானேன் மற்றருள்புரி
வாய்.
...ம்புருவமடமயிலே கறை மிடற்றேங்காதலியே."

என்று சுருக்கையிறுக்கிக் கொள்ளுந்தருவாயில், ...த அஸம்பவத்தைக்கண்டு செடி, கொடி, மரங்..., விலங்குகள், பறவைகள், தோழிகள் எல்லா... கண்ணீர் பொழிந்தார்கள்.

அப்பொழுது திடீரென, இதுதான் நாம் எதிர்ப்...ம் சமயமென்று சுந்தரன் "ஓஹோ மோசம் வந்த! ஓஹோ மோசம்வந்ததே!!என்று கூவிக்கொண்...ாடிவந்து அவள்கையை கெட்டியாய்ப்பிடித்து "பிராணசுந்தரீ, சுலோசனே! என்ன சாஹ... செய்யத்துணிந்தனை! உன்னையாள யான் ஒருவ...பூவுலகிலிருக்கையில்;" "சுகுண! இவள் கழுத்...லணிந்திருக்கும் கொடியை உன் வாளினுல் ...த்தெறி சீக்கிரம்" எனவே, அவனுமவ்வாறு செய்...ர். தோழிகளிருவரும்பார்த்து திடுக்கிட்டு, ...சரியமுற்றவர்களாய் அம்பாளினருளை நினைந்து ...ந்து வியந்தார்கள். அப்பொழுது சுலோசனை ...து வெட்கி, தன் பிராணநாதனைக் கண்ணுரக்...டு களித்து, மதிமயங்கி, தேகஞ் சிலிர்த்து,

### இந்துஸ்தான் - காபி - சாப்பு.

பல்லவி.

"சுந்தரவள்ளலே - எனையாள் மன்னவா
சுந்தரமாயெனை - யாளுமணவாளா (சுந்த.)

சரணங்கள்.

சுகுணசீலனே இவன் - சுந்தர ரூபனே
சுகுணசுந்தரமா - யாளும்கெம்பீரனே (சுந்.)

மாயனேமாரனே - அம்பாளருளாலே
நேயன்சுகுணனை - யாளும்பிராணேசனே (சுந்.)

சுந்தரமாயிராமன் - பதந்தனைப்பாடிய
சுந்தரனேயுன்னை - யணைவதெக்காலமோ (சுந்.)"

என்று பாடிக்கொண்டே சுந்தரபூபதியை யாலிங்கனஞ் செய்துகொண்டாள். சுகுணன் மனங் களித்தான்.

அப்பொழுது சுந்தரனவள் பாடிய பதத்தைக் கேட்டாச்சரியமுற்று தன் தோழனைப் பார்த்து "சுகுண! என்னவற்புதம்! ஈசுவரச்செயலையறிய யாவராலுங்கூடாது. அம்மாளருள்புரிந்த நாதன் நானேயாகினேன். இருந்தாலுமிவளுக்கு நம்மிருவர் பெயரு மெவ்வாறுதெரிந்தது.

சுகுணன்.—"பராசத்தியின்கிருபை பூரணமாயுள்ள இவளுக்குத் தெரியாததுமுண்டோ? இவள் பாடியபாடல் தற்செயலாய் ஈசுவரியின் வரப்பிரசாதத்தினால் பாடியதேயொழிய வேறன்று. ஆனால் இப்பதத்தின் கருத்தினை நன்காராயுங்கால் உன்னையே தன தன்புக்குரிய பர்த்தாவாகக்கொண்டு உன் ஏவலின் வழியாய்த் தான் நடந்து வரவேண்டு மென்பது தோன்றுகின்றது.

"இலங்கிழிலளவு குணனெனவுரைப்பர்"

"விளங்குகின்ற அழகுக்குத்தகுந்த நற்குணங்களுண்டாகுமென்று நூலோர்கள் சொல்வார்கள்; ஆதலின் உன்னுடைய வழகினாலும் அதற்குரிய குணங்களினாலும் "சுகுணசுந்தரம்" என்னும் பேரிட்டழைத்ததேயன்றி வேறில்லை."

இவர்களிவ்வாறு இருக்குங்காலையில் சுலோசனையானவள் அம்மாளனுக்கிரஹப்படி தான்கொண்ட வெண்ணநிறைவேறியதென்னு மானச்சபரவசத்தினால் சுந்தரனாகிய தன்னாயகனைத்தழுவிக் கொண்டு நின்றவள் தன்னன்புக்குரிய கொழுநன் தன்னையே உற்று நோக்கினமையால் நாணந்தலைக் கொண்டு தழுவியகைகளை நெகிழும்படிவிட்டு தலைகவிழ்ந்து தன் கட்டைவிரல்நுனியினால் பூமியைக் கீறிக்கொண்டுநின்றாள்.

பின்பு தோழிகளில் மரகதம், "சுகுமாரர்களே! உங்களுடைய நல்வரவினால் எங்கள் தலைவிக்கு பிராணனை நிலைப்பெறச்செய்த பேருதவிக்கு என்ன கைம்மாறு செய்குவோம்.

"கைம்மாறுவேண்டா கடப்பாடுமாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோவுலகு".

என்றபடி, பிரதியுபகாரத்தைவிரும்பாமல் மழையை வருஷிக்கின்ற மேகத்திற்கு உலகினர் என்னசெய்வார்கள். அவ்வண்ணமே யாங்களும்." என்றாள்.

சுதுணன்.—"கற்பகபூங்கொம் பன்னபெண்களே!

"ஒன்றைநினைக்கினது வொழிந்திட்டொன்றாகு
மன்றியதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாதமுன்வந்து நிற்பினுநிற்கு
மெனையாளுமீசன் செயல்." என்றும்,

"ஒன்றுநஞ்செயலில்லை நெஞ்சே" என்றும்,

"சிவஞ்செயலாலே யாதுமென" என்றும்,

"எஞ்செயலாவது யாதொன்றுமில்லை" என்றும்,

"ஆராயும் வேளையில் பிரமாதியானலு
மைய ஒருசொல்லுமுல்லை." என்றும்,

ஆன்றோர்கள்கூறியிருத்தலால் எங்களாலொன்றும் நடக்கவில்லை. கடவுளின் திருவிளையாடின்படி நடந்ததேயொழிய வேறில்லை."

மரகதம்.—'தர்மசீலர்காள்! எங்களரச குமாரத்தி தேவியை உபாஸனைசெய்து ஓர்சத்புருஷனை யடையவேண்டு மென்னும் எண்ணத்தோடு இச்சந்திரகாந்த மண்டபத்தில் தினந்தோறு நிஷ்டைகூடிவந்தாள். ஒருநாள் தேவி—(என்று குறையும்சொல்லி முடிப்பதற்குள்).

சுந்தரன்.—உங்கள் விருத்தாந்தமுழுவது முங்கள் சம்பாஷணைகளினால் முன்னமே யறிந்துளோம் என,

மரகதம்.—"உத்தமபுருடர்கள்! உங்கள் சரித்திராமிருதத்தை பானம் பண்ணுவதற்கு விருப்பமுள்ளவளாகிய இத்தலைவியின் வேல்போன்ற கூரிய கடைக்கண்கள் உங்களிடந் தெரிந்து கொள்ளும்படி எங்களுக்குக் கட்டளையிடுகின்றன. நுங்கதையை நிரம்பிய மனத்தோடு உங்கள் வரலாற்றை வெளியிடுவீர்களாயின்,

"வானோக்கி வாழுமுலகெலா மன்னவன்
கோனோக்கி வாழுங்குடி"

என்றபடி நெடுங்காலமாய் உங்கள் வருகைக்காக தவம்பண்ணிக்கொண்டிருந்த எங்கள் தலைவியின் சோகத்திற்கு ஆறுதலுண்டாகுமாதலால், கிருபைசுரந்து கூறல்வேண்டுமென, சுகுணன், சுலோசனையைக் காப்பதற்கு தாங்கள் வெளிப்பட்டு வந்த வரையிலுள்ள எல்லா சங்கதியையுஞ் சொல்லி முடித்தான்.

இவ்வாறு இவர்கள் வார்த்தையாடிக் கொண்டிருக்கையில், திடீரென்று எங்கோவிருந்து எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே ஓர் புஷ்பமாலை சுந்திரன் கழுத்திலேயும், சுலோசனாதேவியின் கழுத்திலேயும் விழக்கண்டார்கள். அப்புஷ்பமாலைகள் மிகவுமழகாயும் தெய்வ நிர்மாணமாயுமிருந்தது.

அக்காலத்தில் கனகாங்கி சுந்தரவடிவமைந்த சுந்தரனைப்பார்த்து, "இராஜபுத்ர! எங்களின்னுயிர்த்தோழியான சுலோசனையை, அவள் மாதாபிதாவறியாது தெய்வசம்மதத்தின் பேரில் இவ்விதமாய் மணம்புரிய நேரிட்டது. உலகத்தில் யாவருமிவண் நிகழ்ந்ததைக் கேட்டாலானந்தமும் ஆச்சரியமுங் கொள்வார்கள். இவளை யன்பாய்ப் பரிபாலித்து மாரனையிவளிடமணுகாமற்காக்க உம்மைப்பணிந்து வேண்டிக்கொள்ளுகின்றேன்" என, சுகுணன் ஈஸ்வரகிருபையால் நிகழ்ந்த இந்த திருக்கல்யாணத்திற்கு எதுவுமிடராகாது. தம்பதிகளிருவரும் தங்கள் தங்கள் மாலையையு மிச்சுபவேளையிலேயே ஒருவர்க்கொருவர் மாற்றிக்கொள்ள வேண்டுகின்றேன்." என்றான்.

அதைக்கேட்ட சுலோசனாதேவி, (தோழிகளைப் பார்த்து மெதுவாய்) தோழிகாள்! என்தாய்தந்தையர்கள் நாளையதினம் விவாஹத்தை முடிப்பதற்கு எத்தனப்பட்டிருப்பதால் அவர்களுடன்பாட்டின் பேரில் இவ்விவாஹ நடப்பது நியாயம். அவ்விதம் நடக்தால் தான் உலகினர் பழிகூறார்கள்.

மேலுமிப்படி நடந்துவருவதுதான் உலகவழக்கம். பெண்களுக்[illegible] சுவாதந்தரமேது?" என்றதைக் கேட்ட சுகு[illegible]ன், "இங்கு நிகழ்ந்த வற்புதங்களெல்லாம் தெய்[illegible]ங்கல்பமாகவே யிருக்கின்றன. ஆகாயத்தினின்று மிரண்டு மணமாலைகள் வந்து உங்களிருவர் கழுத்திலும் வீழ்ந்ததன்றோ? அதனை யோசிக்குங்கால், இதுதான் நீங்கள் விவாஹஞ் செய்தற்குறிய சுபமுகூர்த்தகாலமென்று தெரிவித்தமையைகுறிப்பிக்கின்றமையால் அதற்கு விரோதமில்லாலாமலே ஒருவர்க்கொருவர் மாலைமாற்றிக் கொள்வதே நலமாம். நிந்தாய் தந்தையர்களிவ் வற்புதத்தைக் கேள்வியுறின் மிகுந்த சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்வார்கள். நீ யாதொன்றுங் கவலையுறற்க? என, சுலோசனை ஒன்றுங்கூறாது மாலையை எடுத்து சுந்திரன் கழுத்திலணிந்தாள். உடனே ஆகாயத்தினின்றும் புஷ்பங்களுதிர்ந்தன. தோழிகள், சுகுணன் கண்டு மகிழ்ந்தார்கள். "சுபம் சுபம் சுபம்" என்று மும்முறை ஆகாசவாக்கெழுந்தது அவ்வாக்கானது

"ஆயன் பதியிலறன் பதிவந்துற்றழகன்
மாயனாதுங் கருவியானூர்—தூயமணி
குன்றுபோல் விளங்குங்கு விமார்பாள் தன்னுடனே
இன்றுபோ லென்றுமிரு."

என்றுசிகூறியது போலுமிருந்தது.

இவர்களெல்லாரு மிவ்வாறு ஆனந்தமா யிருக்குமதே காலத்தில் சுகுணன் கழுத்தில் ஓர் விநோதமான பூமாலை விழுந்தது. இதென்ன ஆச்சரியமாயிருக்கின்றதென்று திடுக்கிட்டு பிரமித்திருக்கையில் ஓர் விசித்திரமான பூச்செண்டொன்று ஆகாயத்திலிருந்து சுந்தர[illegible] கைக்கு நேரில் வர அதை அவன் கையில் ஏந்தினன். அதற்குள் ஓர் பொற் சுருள் தோன்றிற்று. அதைப்பிரித்துப்பார்க்கும்பொழுது அடியில் வருமாறு எழுதியிருந்தது.

"இப்பூமண்டலத்தை ஒரு குடைக்கீழாள்பவனும், சுசீலதனயனும், மாயாபுரியின்அரசனுமான சுந்தரபூபதியே! நீ, சுந்தரியும், ஹேமாபுரி இராஜபுத்திரியும் சாறுதத்தன் மனோரமையிருவருக்குமுற்பவித்தவளுமான சுலோசனையை மணந்தது பெரிதல்ல. ஹேமாசலத்தின் பக்கல் தவஞ்செய்துக் கொண்டிருக்கும் பரமசாத்வியான கிருபாகடாக்ஷா என்னு மாகாமுனிவருடைய ஆசிரமத்தின் சமீபமாயுள்ள ஓர் சந்தண மரத்தினடியிற்றோன்றும் பிலத்வாரத்தின் வழியேசெல்ல ஆங்கு காணுமோராலயத்தின் முன்னிலையில் அம்பாள் திருவடியையே தியானித்துக்கொண்டிருக்கும் "சம்பகாவதி" என்ற ஓர்பெண்மணி மூன்று இராத்திரிக்குள்ளாக தனக்குகந்தத ஓர் சுகுண சுந்தரனைக் காணவிடிற் றீயில் பாய்ந்து பிராணனை விடுவேன் என்று தன் முன்னக்னிகுண்டத்தை ஜாஜ்வலியமாய்விருத்திசெய்துக் கொண்டு இருக்கின்றாள். நாளையுதயத்திற் குள்ளாக அமைச்சன் புதல்வனும் உனக்கு நற்றோழனுமான சுகுணனுக்கு அவளை மணம்புரிவிப்பாயாக! சுகுணன் கழுத்திலுள்ள பூமாலையைப் போலவே யவள் கழுத்திலும் ஓர் பூமாலை யணிந்திருக்கின்றனள்."

பின்பு, சுந்தரன், சுகுணனைநோக்கி மித்திர! இதுவென்ன வாச்சரியத்தின்மேலாச்சரியமாக விருக்கின்றது; இப்போது நிகழ்ந்து கொண்டிருக்கும் விவாஹ முற்றுப்பெறுவதற்கு முன்னமேயே இதுபோன்ற வேறொரு காரியத்தை முடிக்குமாறு கடவுளாக்கினை யிடப்பட்டிருக்கிறதே. இவ்விர

ண்டு காரியங்களும் நமக்கு நன்மையைத் தருவதில் முக்கியமானவைகளே." என்றுசொல்லி, சுலோசனையைப் பார்த்து, "என் கண்மணி போன்ற சுலோசனா! எனது தோழனும் மந்திரியுமாகிய சுகுணனுக்கு சீக்கிரமாய் விவாஹத்தை முடிக்கும்படி எழுதப்பட்டிருப்பதைக் கேட்டாயன்றோ! அது காரியத்திற்கு யான் சென்றுவருமளவும்"——என்று சொல்லும் பொழுதே அவள் மூர்ச்சித்து கீழேவிழுந்தாள். அவ்வீழ்ச்சியானது,

"திரைகடலோடியுந் திரவியந்தேடெனச் செப்புமௌவை
உரைபழுதன்றென சோர்ந்தாள் கழுக்குன்றத்தோர்
[மடமான்."

என்றது போலிருந்தது.

பின்னர் சுகுமாரன் சைத்யோபசாரத்தினால் மூர்ச்சை தெளிவித்து. "உன்னைப்பிரிந்து அரை க்ஷணங்கூட சகித்திருக்க மாட்டேன். அவ்வளவு வன்னெஞ்ச முடையவ னல்லேன். நாளையதினமெவ்விதமும் உன்னிடம் வந்து சேருவேன். அதுவரையும் கலக்கமுறாதிருக்க வேண்டுகிறேன்." என, சுலோசனை, "பிராண நாதா!" உன்னை எனக்கிசைந்த காதலனாகப் பெறுதற்கு நானடைந்த துன்பத்தை உன் கண்களாறக் கண்டும் பிரிந்து போய் வருகின்றேனென்னும் வார்த்தையை என்னிடஞ் சொல்ல உன்மனதும் வாக்கும் எவ்வாறு துணிந்தன? "வன்னெஞ்சமுடையே னல்லேனென்றாயே" என்றாள்.

உடனே சுந்தரன், "பிராணசகீ! நிஷ்காரணமாயுன்னைப்பிரிந்துபோதல் வேண்டுமென்னுங் கருத்தினால் இது சொன்னேனில்லை; கடவுளின் கட்டளையவ்வண்ண மிருந்தால், நீயாவது நானாவது என்ன செய்யலாம், அதற்குட்பட்டே யன்றோ நடத்தல் வேண்டும். நானங்கனஞ் சென்றாலும் என்மனதும் கண்ணும் நின்னைவிட்டு நீங்குவனவல்லவே! ஆதலின் உன்னைப்பிரிந்து போனவனாய் எண்ணற்க. சீக்கிரமுன் கண்களிக்கும்படி நாளையதினம் உன்னெதிரில்வந்து நிற்கக்கடவேன். அதுகாறும் கவலைப்படவேண்டாம்; சகித்திரு; விடைதருக," என்றதைக் கேட்ட சுலோசனை, "என்னன்புக்குரிய காதல! நின்பேரிற் குற்றமில்லை. உன்னிமித்தம் யானடையவேண்டிய வருத்தத்தின் சேஷமிருக்குமாயின் அதனையுமனுபவித்தே தீரவேண்டுமல்லவா?

"அளித்தஞ்சலென்றவா நீப்பிற்றெளித்தசொற்
றேறியார்க்குண்டோதவறு."

நம்பிக்கையான மொழிகளை நம்பினவர்கள் குற்றமுடையரல்லர் என்றிருத்தலால் உனது வார்த்தையை நம்புகின்றேன். மறவற்க, போய் விரைவில் வருக" என அருமையான விடைதந்தனள்.

இவ்விருவர்களும் தங்கள் குதிரைகளிலேறிக்கொண்டு ஹேமகூடத்தின் மற்றொரு பாகத்திலிருக்கும் கிருபாகடாக்ஷர் ஆசிரமத்திற்குச் சென்றார்கள். சுலோசனை ஒருவாறு மனந்தேறி, பிராணசகிகளுடன் தன்னாயகனுடையவும் சுகுணனுடையவும் குணாதிசயங்களைவியந்து பேசிக்கொண்டு, "இன்னொருமுறை எப்போது காணப்போகிறோமோ தெய்வங்கூட்டிப் பிரித்ததே" என்னு மேக்கத்துடன் சகிமார்களுடன் தன் கன்னியாமாடம்போய்ச் சேர்ந்தாள்.

தன்னருமைப் புதல்வி தினந்தோறும் தன்னுடன் சல்லாபமாய்ப் பேசுவதுபோலில்லாமல் முகவாட்டத்துடன் திக்பிரமை கொண்டதுபோல் வார்த்தையாடாமலிருந்ததைக் கண்டு, "என்னன்புக்குரிய குழந்தாய்! இன்றேன் ஒருவிதமாயிருக்கின்றனை? நின்னருமைத் தந்தையுநானு நினக்கு நாளையதினம் விவாஹத்திற்குரிய பிரயத்தனங்களைச்செய்துகொண்டு மகிழ்ச்சியுற்றிருக்கின்றோமே! நினக்கு விவாஹஞ் செய்துக்கொள்வதில் விருப்பமில்லையா? அல்லது நீ சிருங்காரவனத்தில் விளையாடச்சென்றகாலையில் வனதேவதை, பேய், பூதங்கள், வெருட்ட பயந்து இவ்வலங்கோலமுற்றனையோ? கூறுக? என, அவள் தன் னன்னைக்கு விடைகூறாது நாணத்தினால் தலைகவிழ்ந்திருந்தாள். பக்கலிலிருந்த தோழிமார்கள் அரசியைப்பார்த்து, சுலோசனையானவள் தனக்குரிய நாயகனை யடையுநிமித்தம் தேவி உபாசனை யாரம்பித்ததுமுதல் இன்றையவரையில் நிகழ்ந்த நடக்கைகளெல்லாம் ஒன்று மொளியாமல் சவிஸ்தாரமாய்ச் சொன்னார்கள். அதைக்கேட்ட மனோரமை ஆச்சரியங்கொண்டு, நம்மருமைப்புதல்வி தேவியினனுக்கிரஹத்தால் சிறந்த காதலனை யடையப்பெற்றனள் என்றால் இதைவிடச்சிறந்த பேறு நமக்குவேறென்னவிருக்கின்றது, என்னும் பேரானந்தவாரிதியில் மூழ்கினவளாய் தன் கொழுனன்பாற் சென்று உள்ளக்களிப்புடன் உரைத்தனள். அதுகேட்ட வரசனும் தாங்கமுடியாச் சந்தோஷக்கடலில்மூழ்கி, "மண்டலாதிபனான சுந்தரனை நாயகனாகப்பெற நம் புதல்வி என்னபாக்கியத்தைச் செய்தனளோ? தேவி மதுரையில் மலயத்வஜ பாண்டியனிடம் தான் குழந்தையாயவதரித்து சுந்தரேசனை யவ

னுக்கு மருமகனைகத் தந்ததுபோல் நம்புதல்விமூல மாய் சுந்தரனை நமக்கு மருமகனைகத் தந்ததும் அவ ளுடைய பெருங்கருணேயே." என்ருன்.

தேவியின் கிருபாவீக்ஷணியத்திற்கு நாம் பாத் திரர்களாயினமையால் நாம் ஒன்றற்கும் அஞ்ச வேண்டுவதின்று." என்று தேவியைநோக்கி,

"தண்ணிலாமிலேந்தமுக்கட்டணிமுதற்சகோரமுண்ண
வெண்ணிலாமுறுவல்பூத்துவிளங்குமொண்முகத்திஞய்க்கு
எண்ணிலாவுயிர்களெல்லாமினியநின்புதல்வரேனு
மண்ணிலாரென்னின்மேலாவாய்ப்பரின்கருணேபெற்ருர்."

"மூவருந்தேவர்மற்று முனிவருமறையுந்தோரப்
பாவரும்புகழ்மையென்னுற் பாடுதற்கமையுமோநின்
றேவருந்தொழுதற்கெட்டா விலங்கெழிற்கமலமன்ன
சேவடிதமியனேன்புன் றலேமிசைச்சேர்க்கற்பாற்றே."

வேயினே வென்றெளிர் தோளினே யம்பிகை வேலணேயும்
பொழிமததந்திச்
சேயினேயும் பரிவா விருமென் றுடைசேர் புறவாடல்
விரும்பன்பின்
"தாயெனேயும் பொருளா நினேயுந்தவம்படாது முயன்
றது தமியன்யான்
தூயருபாலன் கொடிபோலு நிறந்திகழ்தோகை யரம்
பையர் தொழுமானே."

என்று ஸ்தோத்திரஞ்செய்து தன் மனேவியைப் பார்த்து, பிராணசகி! நாமரியதவஞ்செய்துப் பெற்ற சுலோசனேக்கு மனதிற்கிசைந்த நாயகனுக இப்பூ வுலகனைத்தையும் ஒருகுடைக்கீழ் ஆள்கின்ற சுந்த ரன் வாய்த்ததுதான் விசேஷம்; இன்று உபவனத் தில் தெய்வசங்கல்பத்திஞல் நிகழ்ந்த் மணக்கோலத் தைக்கேட்டு ஆச்சரியமும் களிப்புமடைந்தாலும் ஒருவிதத்தில் வருத்தமும் வந்து போராடுகின்றதே, என்செய்வேன், எண்ணியதொன்றும் நடப்பதொன் றுமாக விருக்கின்றதே, அதஞலரசர்களால் கலகம் சம்பவிக்குமோ யாதாகுமோ" என்று சிந்தாக்கிராந்த ஞஞன். அது கேட்ட மனேரமை, "பிராண நாதா! சுந்தரன் சக்தியாயுதம் பிடித்து வருவனேல் எல்லாருங்கண் டஞ்சுவார்கள், அவனுடையபிரதா பம்உலகமறிந்ததன்றே!" என, இராஜன் 'அடிகண் மணி' "நீ தைரியங்கூறுகின்றனே, ஆயினும் நாளேயு தயத்தில் சுந்தரனிங்ஙனம் வராவிடில் நாம் செயற்பா லதுயாது?" என, அரசி, "மகாராஜனே! அவன் வரா மலிரான்; மேல் நடக்கவேண்டியவைகளுக் கெத்த னிக்கவேண்டுவதே," என, இராஜன் "அடி மங் கையர்க்கரசியே! அரசர்களுக்கெல்லாம் திருமுக மனுப்பப்பட்டிருக்கின்றன. இந்நகரத்தை அலங்க

க்கும்படி முரசு அறைந்தாயிற்று. அரசர்களும் லர்கள் வந்துகொண்டிருக்கின்றார்கள். மற்றகாரி ங்களேயும் சுமுகன் ஜாக்கிரதையாய்ப் பார்த்து ருகிறன்" என்றுன். அப்பொழுது மனே மை, "மகாஇராஜனே! மாயாபுரி அரசனுகிய சுசீல க்கிரவர்த்திக்கு மணவோலே விடுத்ததில் சுந்தர க்கு விவாஹமென்பது குறிக்கப்படாதிருக்குமல் வா? ஆனதால் அவ்வரசன் இத்திருமணத்திற்கு ராமலிருக்கவுங்கூடும்" எனவே, மன்னவன் அவளே நாக்கி, "பெண்ணே! இராஜசபைக்குப்போய் தூத டம் திருமுகமனுப்பி சுசீல சக்கிரவர்த்தியை வர ழைக்கிறேன்." என்றுசெ ்லி தன்மனேவியை ந்தப்புரம்போகும்படி யனுப்பிவிட்டு, தான் தன் பைக்கேகி தன்மந்திரியான மதிவிலாசனுக்கு ழ்ந்த சங்கதிகளே எல்லாமுறைத்து, தூதுவனி ம் பத்திரிகை ஒன்று வரைந்துகொடுத்து நாளேயுத த்திற்குள் அரசனுடன் வந்து சேருவாயாக வன்று ஒரு வேகமான குதிரையில் அனுப்பும்படி ட்டஞ்செய்தவண்ணம் அவன் ஓர் தூதுவனே யாபுரிக்கனுப்பிஞன்.

டி. எஸ். சுப்பராமய்யா.

---

"THE INDIAN LADIES' MAGAZINE."

## ந்திய மேன் மகளிர்க்கான பத்திரிகை.

---

(The Indian Ladies' Magazine) என் ம் இங்கிலீஷ் பத்திரிகையின் டிசம்பர் மாதத் ச் சஞ்சிகையை யாம் பெற்றுப் பார்வையிட் டாம். இந்த சஞ்சிகை கிரிஸ்துமஸ் பண் கையின் பொருட்டுப் பற்பல படங்களோடு ச்சிடப்பட்டு, அழகிய மாதுக்கு அருங்கலங் ளும் பூட்டியதுபோல விளங்கப்பெற்றுள்ளது. தற்படத்தில் நமது பெருமை தங்கிய ராஜப் தி நிதியவர்களின் மனேவியராகிய கர் ஸன் ருமாட்டியின் உருவமும், இரண்டாவதில் திய ஸ்திரீகள் விக்டோரியா ஞாபகார்த்த ஷயமாக முயன்று பொருள் சேர்த்துவரும் யற்சியில் முதன்மையாய் நிற்கும் ஹர்ணம் கு பெருமாட்டியின் உருவமும், மூன்ருவ சித்திரத்தொழிலில் மிக்க வல்லவரென்று சித்திபெற்ற ரவி வர்ம ராஜாவவர்களின்

உருவமும், நான்காவது படத்தில் அவரால் சித்திரிக்கப்பட்ட "தமயந்தியும் அன்னமும்" என்னும் சித்திரக்காட்சியும், பின்வரும் படங்களில் மைசூர் தசராக் காட்சிகளும் சித்திரிக்கப்பட்டு, விஷயங்களும் அநேகமாக இப்படங்களுக்கேற்ப இவற்றை விவரிப்பனவுமா யுள்ளன. இவையன்றி இச்சஞ்சிகையில், அன்னீ பெஸன்ட் மாதுசிரோமணி நமது ஸ்த்ரீவித்யா விஷயமாக எழுதிய ஒருகடிதமும், லளிதா என்னும் ஒரு இளங்கொடிக்குத் தன் அன்புடை நாயகனை இழந்ததனால் உண்டான கொடுந் துயரைப்பற்றின வாஸ்தவ வியாவகாரிக உலகில் நடந்த ஒருவிருத்தாந்தமும், டென்னிசன் என்னும் தற்காலத்து இங்கிலீஷ்மகாகவியொருவர் ஸ்திரீகள் அடையவேண்டிய நிலைமையைப் பற்றி அவர் காவியங்களில் கூறிய விஷயங்களும், ஸ்மித்து துரையவர்கள் இந்தியப்பிள்ளைகளையும் அவர்களது விளையாட்டுக் கருவிகளையும் பற்றிக்கூறும் விஷயமும், இன்னம பற்பல விஷயங்களு முள்ளன. அன்றியும், இச்சஞ்சிகையில் அநேக தனிச்செய்யுள்களும் அடங்கியுள்ளன. மேலே கூறிய விஷயங்களில் மூன்று விஷயங்களை நம்பத்திரிகையைப் படிப்பவர்களுக்கு உபயோகமாகும்படி இங்குஎடுத்து விவரிப்போம்.

I.

முதல் விஷயம், அன்னீபெசன்ட் அம்மணி ஸ்த்ரீ வித்தியா விஷயமாகக் கூறுவது. இவர் சொல்லும் விஷயங்களில் முக்கியமானவை—அவிவேகமானது தேசாபிவிர்த்திக்குப் பிரதிகூலமும் அபாயமுமாகும். தேசத்திலுள்ள ஜனங்களில் பாதி ஸ்திரீகளாதலின், தேசம் அபிவிர்த்தியடைய வேண்டுமானால், ஸ்திரீ ஜனங்களுக்கு வித்தை அவசியம் வேண்டும். தாய்மார்கள் அவிவேகிகளாயிருப்பின் பிள்ளைகளும் அவிவேகிகளாவார்கள். அதனால் தேசத்துக்கு க்ஷயமுண்டாகும். 'தாயைப் போலிருக்கும் பிள்ளை' என்பது பழமொழியாதலின், தாய்பரிசுத்தமும் தெய்வபத்தியும் ஞானமும் சத்தியும் உள்ளாளாயின், பிள்ளைகளும் அக்குணங்களையே பெறுவார்கள். அவிவேகியாகிய தாய், தன் பிள்ளைகளின் தேகபலத்தைக் கெடுத்து, புத்தியைத் திரித்து, இஷ்டாநிஷ்டங்களைக் கெட்டவழியிற் செலுத்தி, ஆன்மாவையும் அந்தகாரத்தில் அழுத்துகின்றனள். அவிவேகிக்குச் சுகாதார முறைகள் தெரியா. மனோசத்திகளைத் தூண்டி விருத்திபண்ணவும் தெரியாது. சுயநன்மையென்னும் கறையினால் நிர்மலமான நேயத்தையும் கெடுத்துவிடுவாள். நற்சமயத்தைப் போதித்தற்கு மாறாக அஞ்ஞானக் கொள்கைகளைப் போதிப்பாள்.

ஆதலால், பெண்களுக்கு வித்தை அவசியம் என்று ஒப்புக்கொள்ளத் தக்கது. ஆயின், அவர்களுக்குக் கற்பிக்க வேண்டியவிஷயங்கள் எவை? இங்கிலாந்து தேசத்திற்பெண்கள் புருஷர்களோடு தமது ஜீவனார்த்தமாக ஒக்கநின்று வேலைசெய்ய வேண்டிவருதலால், அத்தேயத்தில் புருஷர்கள் கற்றுக்கொள்ளும் கல்வி ஸ்த்ரீகளுக்கும் அவசியமாயிற்று. இந்தியாவிலோ அவ்வித நிர்ப்பந்தங்களில்லை. ஆதலால், அத்தேயத்துப் பெண்களுக்குரிய கல்வியை இத்தேசத்துப் பெண்களுக்குப் போதித்தல் அநாவசியம். இத்தேசத்துப்பெண்களுக்கு வேண்டிய கல்வியெது வென்னில்,

(1) சுவபாஷாஞானம். அதாவது தமிழ் தெலுங்குமுதலிய அவரவர்களுக்கு குரியசுவபாஷையை இலக்கண இலக்கியங்களோடுபடித்துப் பொருளறிந்து கொள்ளுதலும், அவற்றில் தம்கருத்து விளங்கச் சொற்களையமைத்து எழுதக்கற்றுக் கொள்ளலும்.

(2) சம்ஸ்கிருத பாஷா ஞானம். இதில் பழைய நூல்களையும், காவ்யாலங்காரங்களையும், படித்துப் பொருளறிந்து சந்தோஷித்துப் பயனடையும்படியான தேர்ச்சியடைதல்.

(3) இங்கிலீஷ் பாஷா ஞானம். இதையும் சாத்தியமான வரையில் கற்றுக்கொள்ள வேண்டும். இதனால் இங்கிலீஷ் படித்தவர்களாகிய தமது கொழுநரோடும், புத்திரரோடும்,

மனவொற்றுமை யுண்டாதலன்றி, எண்ணிறந்த விஷயங்களை அப்பாஷையின் வழியாய்க்கற்றுக் கொள்ளுதலும், தற்காலத்தில் இத்தேசத்தில் நாகரிகத்துக்கு முக்கியசாதகமாகிய ஒன்றைக் கிட்டிப் பழகுதலும் பிரயோசனமாகும்.

4. சுகாதார முறைகளையும், தேகதத்துவங்களையும், வயித்திய விஷயங்களையும், அறிந்திருத்தல். இவற்றால் விடுவாசல்களைச் சுத்தமாகவைத்துக் கொள்ளவும், பிள்ளைகளுக்குப் பிணிவாராமல் காக்கவும், வந்த காலத்தில் ஔஷதங்களையும் பத்திய பாகங்களையும்கொடுத்து நீக்கவும் உபயோக மாதலின் இப்படிப்பு அத்தியாவசியமானது.

5. இவையன்றி வீட்டில் இன்பமும் ஆசையும் உண்டு பண்ணுவதற்கேதுவாகச் சங்கீதம் சித்திரம் முதலிய வித்தைகளிலும் தேர்ச்சி வேண்டும்.

இவ்விதப் படிப்பால், இந்து ஸ்திரீகளுக்கு விளையும் கெடுதி யொன்றுமில்லை. இப்படிப்பு அவரது அறிவை வளர்த்திக், குடித்தன விஷயங்களில் மேன்மேலும் செல்வாக்கைக் கொடுத்து, அவரது நற்குணங்களையும் உறுதிப் படுத்தும்.

6. இவற்றோடு மத விஷயமான படிப்பும் வேண்டும்.

II.

இரண்டாவது விஷயம், சித்திரவேலையில் ஒப்புயர் வற்ற ரவிவர்ம ராஜாவின் விருத்தாந்தம்.— ரவிவர்மா என்பவர், திருவனந்த புரத்துக்குச் சமீபமாகக் கிளிமானூரென்னும் கிராமத்தில் பிறந்தவர். இவருடைய குடும்பம், திருவனந்தபுரம் ராஜவம்சத்தோடு விவாகசம்பந்தங்களால் நெடுநாளாய்ச் சம்பந்தப்பட்டுள்ளது. இவரது தாயார் நன்றாகப்படித்தவர்; இனிய குரலோடு பாடவல்லவர். பார்வதீகல்யாணம் என்று ஒரு சிறந்த காவியம் கற்பனாலங்காரங்கள் நிரம்ப மலையாளபாஷையில் இயற்றியுள்ளார். ரவிவர்மாவுக்குச் சிற்பவித்தையில் இயற்கையாயுள்ள நேசமும் ஆசையும், இவரிடத்தே பெறப்பட்டன. ரவிவர்மா பால்யத்தில் படிப்பு விஷயத்திலும் சித்திரம் எழுதும் விஷயத்தில் அதிக இச்சையைக் காட்டினார். கரியினாலும் சுண்ணாம்புக் கட்டியாலும் அநேக சித்திரங்களைச் சுவரிலும் தரையிலும் வரைந்து [illegible]டிருப்பார். இவரது மாமனாகிய ராஜராஜவர்மா என்பவர், தாமே சித்திரவேலை விநோதார்த்தமாகப் பயின்று வந்ததனால், இவரது சாமர்த்தியத்தை, வியந்து தம்மோடு பழக்கிவந்தனர். இவர் அதிசீக்கிரத்திலே, சித்திரம் எழுதுவதிலும் வர்ணம் கொடுப்பதிலும் நல்ல தேர்ச்சியடைந்தனர். பதினாலாம் வயதில், திருவனந்தபுரம் மகாராஜாவின் பிரீதியைப்பெற்று, அன்றுமுதல் அவரால் ஆதரிக்கப்பட்டு வந்தனர். பதினேழாம் வயதில், இராணிமார்களுடைய கடைசித்தங்கையை விவாகம் செய்யப்பெற்றனர். இப்போது ராஜகுடும்பத்தில் சுவீகாரமாயிருக்கும் மூத்தராணி, இளையராணியிருவரும், இவரது பெண்வயிற்றுப்பேர்த்திமார்களே.

இவர்தமது இருபதாவதுவயதில், திருவனந்தபுரம் சென்றிருந்தபோது, அங்குவந்திருந்த அதிபிரவீணரான ஒரு இங்கிலீஷ் சித்திரக்காரரின் சாமர்த்தியத்தைக்கண்டு அவரொடு பழகி, நீர்வர்ணங்களைவிட்டு அவரைப்போலவே எண்ணெய் வருணங்களால் சித்திரிக்கக் கற்றுக்கொண்டனர். இவர் பெண்களின் உருவங்களைச் சித்திரிப்பதில் மிக்க சாமர்த்தியத்தை அடிமுதற்காட்டினர். சென்னையிற் காட்டப்பட்ட பொருட்காட்சிகளில் இவர் பலமுறையும் கவர்னர் தங்கப்பதக்கத்தைப் பரிசுபெற்று பற்பல கவர்னர்களாலும் நன்குமதிக்கப்பட்டனர். இவர் இக்காட்சிகளுக்காகச் சித்திரித்தபடங்களில் ஒன்றாகிய தமிழ்ப்பெண் சுரபத்வாசிக்கும் படமும் இன்னொன்றும் நமது மாக்ஷிமைதங்கிய ராஜசக்கிரவர்த்தியவர்கள் 1875-ம் ௵, வேல்ஸ்இளவரசென்னும் ஸ்தானத்தில் இத்தேயத்துக்கு விஜயம் செய்தபொழுது, திருவனந்தபுரம் மஹா

ராஜாவால் கொடுக்கப்பெற்று, அப்படங்களின் வேலைத்திறத்தைக் கண்டுமிக மெச்சிக்கொண்டனர். அவற்றை சித்திரித்தவருக்கு ஐரோப்பியப்பயிற்சியில்லையென்று கேட்டு மிகவும் ஆச்சரியமும் கொண்டனர். சீதையின் பூமிப்பிரவேசமாகிய 'சீதையின் சோதனை' என்னும் இவரது சித்திரத்தின் அழகைக்கண்டு, பரோடாராஜாவவர்கள் மிகவியந்து இவரைத் தம்பட்டாபிஷேக காலத்தில் தம் அரண்மனைக்குத் தருவித்தனர். இவர் வீணைவாசிக்கும் பாவனையில் சித்திரித்த நாயர் ஸ்திரீயின் படத்துக்காக, புனு பொருட்காட்சியில் ஓர் பொற்பதக்கத்தைப் பரிசுபெற்றதன்றியும், பொம்பாய்கவர்னரின் வெகுமானத்தையும் பெற்றனர். இவர் பரோடா மஹாராஜா, மகாராணி, ராஜா ஸர் மாதவராவ், தாம்ஸன்துரை, போர்டர்துரை முதலான அநேக பெரியமனிதர்களின் படங்களையும் சித்திரித்திருக்கின்றனர். 1888-ம் ஆண்டில், கைகோவார் மஹாராஜாவால் இதிகாசபுராண விஷயங்களைச் சுட்டிச் சிலபடங்கள் சித்திரிக்கும்படி நியமிக்கப்பட்டு, அதற்காகப்பற்பல இடங்களுக்குச் சென்று அந்தந்த ஸ்தலங்களைக் கண்ணாரப்பார்வையிட்டு பதினைந்து சித்திரங்களை அத்தியற்புதமாகச் சித்திரித்தனர். இப்படங்களின் அழகைப்பார்க்கும்பொருட்டு அக்காலத்தில் பரோடா நகருக்கு எண்ணிறந்த புருஷரும் பெண்களும் சென்றதாகச் சொல்லுவர். இப்படங்கள் எல்லாருக்கும் பயன்படும்படி, பம்பாய் நகரில் தம் சொந்தச் செலவில் சித்திரம் பதிக்கும் ஓர் அச்சியந்திரத்தைத் தாபித்து, சித்திரங்களையெல்லாம் அச்சியற்றிப் பரவச் செய்தனர். இப்போது இவர் சித்திரங்கள் இல்லாத வீடுகள் இவ்விந்துதேசத்தில் ஹிமஸ்ஸேது பரியந்தம் எங்கும் அநேகமாயில்லை யென்றே சொல்லலாம். இவருக்குச்சமானமானவர் சித்திரவேலையில் இவ்விந்தியாவில் ஒருவரும் இல்லை. இவருக்கு இப்போது வயது ஐம்பத்து மூன்று ஆகிறது.

---

## III.

மூன்றாவது விஷயம், அம்தில் பெருமாட்டி சென்றதடவை கண்ணனூருக்குப்போயிருந்த காலத்தில், ஒருஎளிய யூரேஷியஸ்த்ரீ, தன் பிள்ளையை ஆதரிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அதற்கிணங்கி, அப்பிள்ளையைப் படிப்பிக்கும்பொருட்டுச் சென்னை நகருக்குக் கூட்டிக்கொண்டுவந்த விஷயத்தைக் குறிக்கின்ற ஒரு பாடல். அப்பாடலைப் பின்வருமாறு மொழிபெயர்க்கினறோம் :—

1. நலம்தரும் தெய்வதூதுவர் எல்லாம்
விண்ணிடத்தன்றி மண்ணிடத்தில்லர்
என்னவும், பவத்திற் றுன்னுநர் அல்லால்
நந்தலில்தூய சிந்தையாளரை
மாநிலம் கிடைக்கப்பெற்றில தென்னவும்,
எண்ணுவீராயின், அதுபிழையாதலின்,
மற்றதைத் தெரிந்து முற்றிலும் ஒழிக்க ;
வருந்தலும் கண்ணீர் வடித்தலும்கண்டு,
தெய்வதூதர்போல் நைகுநர்தமையும்,
பாவமென்றொருவன் பயிர்செய்தறுத்துக்
கொண்டிடும் விளைவினைக்கண்டகங்கரையும்
சிந்தையாரையும் பெற்றுள துலகே.

2. எற்றிடும் அரியணைவீற்றிருந்தருளும்
பரமனைச்சூழ்ந்த பண்ணவர் வழியிற்
றிகழொளி போலத்திகழொளிசான்ற
கண்களுமுள்ள காணுமிவ்வுலகே ;
செய்மை செய்தற்கும், இன்மையால் வருந்தும்
அளியராகிய எளியவர்க்குதவவும்,
நீட்டியகைகளும் உள்ளன ; அன்றி
உலகோர் சொல்லை உண்மதித்தாயா
தலகிலா அருள்சேர் அவலனுக்கன்பு
நிரம்பிய உள்ளமும் உள்ளன ; இவைதாமே
அகதியா ளுர்க்கமகிழ் வூட்டி,
வாணுளென்னும் வன்முள்வழியே
செல்லுங்காலை அல்லலுற்றழுங்கி
நடந்திளைத்தார்க்கும் துணைசெயுமன்றே.

3. தெய்வதூதர்கள் நம்மை முற்றிலும்
துறந்தனர் என்று நினைந்தீர் கொல்லோ ;
அங்ஙனம் நினைதலை யொழிமின் ; அன்னோர்
மண்ணிலும் ஈங்குவழிக்கொளல் உளதால் ;
மற்றவர் உருவுமவ் வானகத்திடையே
உற்றவர் உருவம் போல்வனப்புறுமால் ;

எழில்கொழும் அவர்தம்விழியிணைதானும்
வானோர்வழி யின்வளரொளி பெறுமால்;
அளியொடும் அன்னோர் எளியார்க்கிரங்கி,
இப்புவியுள்ளார் இடும்பையைத்தீர்த்து,
செப்பரும் பாவமும் தெய்வநிந்தனையும்
நீக்குவர்; அன்னவர் நேயமும் நினையின்
வானுறும் நெறியைமயர்வறவிளக்கி,
இனிமைமின் முழுதும் காட்டிடுமன்றே.

இவ்வுலகின்கண்ணே ஏழைபரதேசிகளுக்கி ரங்கித் தெய்வதூதர்போல நன்மை செய்பவர்கள் அநேகர் உள்ளார். அவர்களுள் நமது கவர்னர்மனைவியாராகிய ஆம்தில் பெருமாட்டியும் ஒருவர் என்பது கருத்து.

---

## * FEMALE EDUCATION.

## பெண் கல்வி.

சென்ற அக்டோபர் மாதம் 15-ம் தேதி பம்பாய் நகரில் ஜனசாரச்சீர்த்திருத்தச் சபையொன்று கூடியது. அச்சபைக்கு அநேக ஹிந்து மாதர்களும் பார்சிமாதர்களும் வந்திருந்ததே யன்றி அவர்களில் ஒரு பெண்மணி ஸ்த்ரீ வித்யாவிஷயமாக ஒரு உபந்யாசமும் இங்கிலீஷ் பாஷையில் யாவரும் கொண்டாடும்படிச் செய்தனள். அவ் வுபந்யாசத்தை அடியில் அவள் கூறியபடியே எடுத்துரைக்கின்றோம்.

“நமது தேசத்தை உயர்த்தும்பொருட்டு அநேக சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமாயினும் அவை யெல்லாவற்றினும் ஸ்த்ரீ வித்தை அதி முக்கியமானது. மற்றச் சீர்திருத்தங்களெல்லாம் இச்சஞ்சாரச் சீர் திருத்தமென்னும் ஓர் மண்டபத்துக்கு அவ்வளவும் அவ்வளவு கற்கள் பேசலாம்: ஸ்த்ரீ வித்தையே நடுஸ்தம்பம்போலாகும். நமது தேசத்துக்கு கேடோளாகப் பெருங்கேடாயிருப்பவர்கள் படிப்பில்லாத தாயும், கல்வியில்லாத மனைவியுமாம். நம் ஆசாரங்களிலுள்ள கெடுதிகளில் முக்கால்வாசியும் பெண்களின் அறியாமையினாலே உண்டாகின்றன. நமது ஆடவர்கள் தேகபலங்குன்றியிருப்பதென்னெனில் நம் பெண்கள் சுகாதார முறைகளையும் போசன விதிகளையும் உணராமையினாலேதான். நம் கைம்பெண்களின் நிலைமை கஷ்டமாயிருப்பதும் ஸ்திரீகளின் அவிவேகத்தினாலும் மௌட்டியக் கொள்கைகளினாலுமே. நம்மவர்களில் சீர்திருத்தம்செய்ய முயல்பவர் சில வேளைகளில் தயங்கிச் சஞ்சலமடைந்து பின்வாங்குவதும், தமக்குத் துணையாய் நின்று தைரியம்சொல்லற்குரிய மனைவிமார்களே தமக்குப் பிரதிகூலமாகி இடையூறு விளைத்தலினாலேதான். ஒரு ஜனசங்கமாவது இராச்சியமாவது அதைச்சார்ந்த ஒவ்வொருவரும் திருந்தினாலொழியத் திருத்தமடையாது. இவ்வுண்மையை எவ்வளவு தாம் எடுத்துச்சொன்னாலும் சொல்லத்தகும். நீங்கள், உங்கள், கூட்டத்தைத்திருத்த நினைவீராயின் உங்களில் ஒவ்வொருவரையும் தனித்தனித் திருத்துதற்கு முயலுங்கள்.

புருஷரது குணத்தை அமைத்து உருப்படுத்துவதில் ஸ்திரீகள் எவ்வளவு முக்கியமானவர்களென்பதை நானெடுத்துக் கூறவேண்டுவதில்லை. நமது சுவபாவம் நமக்கு உறுதியாகப்படிவது தாயாரொழியப் பிள்ளைகளுக்கு வேறு சகவாசம் இல்லாத பாலியகாலத்திலாதலின் தாய் அஞ்ஞானத்தில் அழுந்தியிருப்பாளாயின் அவளெங்ஙனம் பிள்ளைகளுக்கு அறிவைப்போதிக்க வல்லவளாவள்? உண்மை; அவள் தன்பிள்ளைக்கு வஞ்சனையன்றித் தன்னிடத்துள்ளனவாகிய வாஞ்சையையும் மாறுவிசுவாசத்தையும் கொடுக்கின்றாள்; ஆயினும் என்ன? விவேகமில்லாத தாயின் நேயத்தால் விளைவது கெடுதியேயன்றி நன்மையில்லை: இனி ஸ்திரீகள் வயது முதிர்ந்த புருஷர் விஷயமாகச்செய்யும் நன்மை தீமைகளைப்பற்றி நான் உங்களுக்குச் சொல்லவேண்டுவதில்லை. இவ்வுண்மையை ஒவ்வொரு

* Translated from the Indian Ladie's Magazine.

தேசத்து வித்துவான்களும் ஆசிரியர்களும் செவ்வே விளக்கி வற்புறுத்தியிருக்கின்றனர்.

ஆதலின் உங்களுக்குக் கற்றாராய்ந்த தாய்மாரும் கற்றாராய்ந்த மனைவியரும் இல்லாவிடில் உங்களுள் நற்குணமுடைய புருஷரையும் நன்மைமிகுந்த இனத்தாரையும் பெறுதல்முடியாது. புத்திவன்மையிலேனும் ஒழுக்கத்திலேனும் உங்கள் பெண்கள் மற்றெத்தேயத்துப் பெண்களுக்கும் தாழ்ச்சியடையார்களென்பது நிச்சயமே முன்னொரு காலத்தில் நம்பெண்கள் புருடருக்குச் சமானமான நிலைமையைப் பெற்றிருந்தனர். அந்தோ! அந்நிலைமை இப்போது போய்விட்டது. சீதையும் திரௌபதையும் தத்தம் கணவரோடும் அறிவிற் சிறந்த முனிவரர்களோடும் தத்துவ விஷயங்களைப் பற்றிச் சம்வாதித்திருக்கின்றார்கள். அவ்வளவுதானோ? வேதங்களிற்கூடச் சில மந்திரங்கள் பெண்பாலாராலே கூறப்பட்டவாக்ச்சொல்லுகிறார்கள். நான்படித்திருக்கும் ஒருபுத்தகத்திருந்து முற்காலத்திற் பெண்களுக்கிருந்த சுதந்திரத்தைப் பற்றிச் சிறிது எடுத்துக்கூறுவேன். ஒருமகாசபையின் கண்ணே ஓர் பெண்மணி ஆலோசனை கூறும்படி அவள் அரசன் அவையில்வந்து மகனைநோக்கி இடித்துப் புத்திசொல்லினள். இதனால் பெண்கள் அக்காலத்தில் எவ்வளவோ அறிவும் மேன்மையும் பெற்றிருந்தார்களென்றும் அவர்கள் கூறிய புத்திமதிகளும் மேன்மையாக மதிக்கப்பட்டனவென்றும் தெரியவரும். இதற்குக் காரணம் அவர்கள் பெற்றிருந்த அறிவும் கல்வியுமேயாம். அவர்கள் கற்றறிந்திருந்ததனால் தமது புருடர்களுக்கு நல்லபுத்திமதிகளைச் சொல்லி அருமையான பெரிய காரியங்களிற்கூட அவர்களுக்குத் தக்க ஆலோசனைகளைச் சொல்லி வந்ததாகவும் தெரியவருகின்றது. ஆயினும் அவர்கள்தாமடைந்திருந்த கல்வியாலும் சுதந்திரத்தாலும் கர்வங்கொண்டு தமக்கடுத்த எளிய வீட்டுவேலைகளைச் செய்யாது விட்டுவிட்டார்களோ? ஒருபோதும் இல்லை. இவர்களே தாயார்க்கும் மனைவியர்க்கு முரிய கடமைகளைக் குறைவுவாராது செய்து பேர் பெற்றவர்கள். இவர்கள் தற்காலத்திலும் நம் பெண்களைச் சீர்திருத்தவருகின்றனர். தற்காலத்தில் நமது பெண்களிடத்தில் நன்மையும் மேன்மையுமானது யாதேனு முண்டென்னில் அது முற்றும் அவர்கள் நடந்துகாட்டிய நடத்தையினாலே நமக்கு வந்தவைகளாம். எவ்வளவோ முன்னிலைமையில்வழுவின இக்காலத்திற்கூட இந்து ஸ்திரீ தன் புருஷனிடத்துவைத்திருக்கும் காதலும் பக்தியும், இந்து தாய்மார்கள் தம்மக்களிடத்து வைக்கும் வாஞ்சையும் மறுதேசத்தாரால் திருஷ்டாந்தமாக எடுத்துச் சொல்லப்படும். நம் பெண்கள் சுதந்திரமும் கல்வியும் பெற்றிருந்த காலமே நம்தேசம் செழிப்புற்று மேன்மைபெற்றுவிளங்கியகாலம். இன்று அச்சுதந்திரமும் கல்வியும் இல்லாமற்போயின. நாம் அஞ்ஞான அந்தகாரத்தில் அவிவேகக் கொள்கைகளாகிய தீயவாயுவில் கிடந்து கெடும்படி விடப்பட்டிருக்கின்றோம். எம்மை இந்த இருள்நிறைந்த இருட்டறையினின்று எடுத்து யாம் முற்காலத்தில் அநுபவித்திருந்த அறிவென்னும் விரிந்த வெளியிலும் வெளிச்சத்திலும் மறுபடியும் சேர்ப்பின் நம் பெண்கள் நமது அபிவிர்த்திக்குப் பெரும் பாரமான இடையூறாயிருத்தலைவிட்டு நீங்கள் கருதுகின்ற எவ்வகைச் சீர்திருத்தத்திலும் உங்களுக்குச் சாதகமாகநின்று துணைபுரிவார்களென்பது நிச்சயம். ஆதலின் பெண்கல்வியானது மற்றெல்லா விஷயங்களிலும் எவ்வளவு முக்கியமானதென்றும், அக்கல்வியில்லாமை நமது சாதிமதாசாரங்களிலுள்ள சகலமான கெடுதிகளுக்கும் முக்கியமானகாரணமென்றும் உங்களுக்கு விளங்கும். நீங்கள் நம் கெடுதிகளை நீக்கித்திருத்தும் பொருட்டுச்செய்யும் முயற்சிகளால் இக்கெடுதிகளனைத்துக்கும் காரணமாகிய ஒன்றையெடுத்து அதைக்கழுவிச் சுத்தம்செய்யாமல் உள்ளழுக்கிருக்கப்புறம்பே மாத்திரம் அழுக்குநீக்கி மெருகிட்டு மறைத்தல் போதுமென் றெண்ணுவீராயின் எவ்வளவு விடாமுயற்சியோடும் ஆவலோடும் எவ்வ

ளவு முயற்சிசெய்யினும் நமது கூட்டம் திருத்தமடையாது என்பது நிச்சயம். ஆதலின் இவ்விஷயத்தை உட்புகுந்து நாடுங்கள். இத்தேயத்து ஸ்திரீகளுக்குக் கல்வி கற்பியுங்கள். நீங்கள் பெற்றிருக்கும் ஒளியை எங்களுக்குங்கொடுங்கள். இது உங்கள் கடமையாகும். இதனைச்செய்யின் மற்றதெல்லாம்தானே சித்திக்கும். இக்கல்வி எவ்விதமாகப் போதித்தல் வேண்டும் என்னும் விஷயத்தை நான் இங்கு ஆராயவரவில்லை. ஆயினும், இங்கிலீஷ் பாஷாஞானமும், சங்கீதம் முதலிய கலைஞானமும் புகட்டாத கல்வி அதிகப்பயன்படாது. இங்கிலீஷ் பாஷையைத் தெரிந்துகொள்ளுவதால் அடையும் பயன்கள் அளவற்றவாயினும் அவற்றை யானிங்கு விவரிக்கவில்லை. இதைப் பெண் கல்வியில் சேர்த்தலினால் ஜனசாரச் சீர்திருத்தத்திற்கு முக்கியமான இடையூறு ஒன்றை நிவிர்த்தி செய்தலாகும் என்பதை மாத்திரம் உங்களுக்குக் காட்டுகின்றேன். நமது தேசத்தில் பற்பல பாகங்களிலும் பற்பல பாஷைகள் வழங்கிவருதலினாலே அது ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வதற்கு வெகுதடையாய் நிற்கிறது. இத்தடையை நிவிர்த்திசெய்யும்பொருட்டே நாம் பெண்களுக்கு இங்கிலீஷ் கற்றுக்கொடுக்கும்படி நான் உங்களை வேண்டிக்கொள்வது. இனி சங்கீதமுதலிய வித்தைகளைப் பற்றிச் சொல்லுமிடத்து நம்மவர்களுக்குள்ளே தோன்றியிருக்கும் சில பெருங்கெடுதிகளுக்குக் காரணம் இவ்வித்தைகளை இழிகுலத்தவர்களுக்கு நாம் எற்படுத்தியிருத்தலினாலேதான். மனுஷ்யன் மிருகம்போல அன்னபானங்களின் மாத்திரத்தினாலே திருப்தியடையக் கூடாதல்லவா? அவனுக்கு மனமும் அழகு, இனிமை, பெருமை, மகிமை, முதலியவற்றைக் கிரகிக்கும் சக்தியும் உள்ளனவல்லவா? தேகத்துக்குப் போஷணைவேண்டுதல் போல இவற்றிற்கும் போஷணைவேண்டும். அவன் தனது மனோரஞ்சினைக்கேதுவான சங்கீதாதிகளைத் தன்னகத்திலாவது உயர்குடிப் பிறந்தார் சங்கத்திலாவது அடையக்கூடாவிடின் இவற்றை எங்குகூடுமோ அங்குஅடைய நாடுவான். ஆதலின் நமது சங்கீதாதி வித்தைகளையும் இப்போதவைகட்குண்டாயிருக்கும் ஈனஸ்திதியிலிருந்து உயர்த்தித் தக்க நிலைமைக்கும் இடத்துக்கும் கொண்டுவருவீராக. அவ்விடம் யாதென்னில் நம்மில்லந்தான். அவற்றைப் பெறுதற்குரியார் யாரென்னில் மனைவியரும் சகோதரிகளுமே பெண்களுக்கு அவர்களிடத்துள்ள உயர்ந்த குணங்களை ஓங்கி வளர்க்கும்படித் தகுந்த அநுகூலத்தை உண்டுபண்ணிக் கவி சொல்லுவதுபோல் பெண்களை எவ்வளவு தெய்வத்தன்மையுள்ளவர்களாகச் செய்பலாமென்பதை நீங்கள் பிரத்தியக்ஷத்தில் காண்பீர்களாக.

---

ஸ்ரீ

## சிலவாழ்த்துக்கவிகள்.

புதுக்கோட்டை ஹிஸ் ஹைனெஸ் மகா-ள-ள-ஸ்ரீ மார்த்தாண்டபைரவத் தொண்டமான் மஹாராஜா அவர்கள் பிறந்தநாள் மகோத்ஸவ வைபவம்.

(சூரியனுக்கும் மகாராஜா அவர்களுக்குஞ் சிலேடை.)

1. மாமேவும் பெரியகுணர் ணவம்படிந்து நிறைந்தகலை மதியைக் கூடிப்
பூமேவும் இரவகற்றிப் பங்கயமா முகமலர்ந்து பொலியச் செய்து
நாமேவும் ஒளிபரப்பிப் பனிவிலக்கி யொருதிகிரி நடத்து மெங்கள்
தேமேவும் மார்த்தாண்ட பைரவாத் றொண்டமான்காண் சென்னிவேர்தே.

சென்னி நாட்டுக்கு வேந்தராகிய மார்த்தாண்டபைரவத் தொண்டமான் என்னும் எங்கள் அரசர்பிரான், மங்களம் பொருந்தும் நற்குணங்களாகிய கடலிற் படிந்து, பரிபூர்ணமாகிய சாஸ்திரங்களாலாகிய ஞானத்தைப் பொருந்தி, பூவுலகின் கண்ணுள்ள இரத்தற்றன்மையை நீக்கி, மனிதர்கள் தமது தாமரைமலர்போன்ற முகமலர்ந்து மகிழ்ச்சியடையும்படிச் செய்து, உலகிலுள்ளோர்களது நாவாற்றுதிக்கப்பட்ட புகழைப் பரவச்செய்து, துன்பங்களைக் களைந்து, ஒப்பற்ற ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்தாநிற்பர்.

சூரியனைச்சுட்டிப் பொருள்கொள்ளுமிடத்து, "கருநிறம்பொருந்திய பெரியகீழ்க்கடலிற்படிந்து, நிறைந்தகலைகளோடும்கூடிய சந்திரனைச்சேர்ந்து, பூவுலகிற் பொருந்தும் இருளைப்போக்கித்" தாமரை மலர்களை அவற்றின்சிறந்த முகம் மலர்ந்து விளங்கச்செய்து, உயிர்களாகிய நாம் விரும்புகின்ற ஒளியைப் பரவச்செய்து, பனியை அகற்றி, ஒற்றைச் சிக்கரத்தையுடைய தேரைச்செலுத்தாநின்ற." என்று பொருள் கொள்க.

சூரியன் சந்திரனைக்கூடுதல் அமாவாசியை யன்றைக்கு அதுகூடும் மதி கலையில்லாமதியாயிருக்க "நிறைந்தகலைமதி" யென்று அதனைக்கூறியது மங்கலம்; உலகியல் வழக்குமாம். இச்சிலேடையினால் அரசருக்குச் சூரியனோடு ஒப்புமையும் ஒருவாறுதோன்றும். மார்த்தாண்டபைரவர் என்னும் பெயருக்கேற்றபடிச் சூரியனுக்குள்ள குணஞ்செயல்களை இவர் அதனிலும் தன்மையிலேற்றமாகப் பெற்றுளார் என்பது தோன்ற வர்ணித்தனர். 'நாம்' என்றதை அச்சமென்றுகொள்ளுதல் சூரியகிரணத்துக்குப் பொருந்தாதென்றறிக. சூரியனைக்கண்டு உயிர்க்குலங்கள் மனங்களித்தலே இயல்பு.

(முத்துக்கும் மகாராஜா அவர்களுக்குஞ் சிலேடை.)

2. குணம்பயிலு முளத்தாலுங் கோவேந்தர் சிகாமணியாய்க் குலவ லாலும்
மணம்பயிலுந் தாரணிவார் மார்த்தாண்ட பைரவராம் வளவன் சீர்த்தி
வணம்பயிலு மணியணையார் சுவாதியெனு நாளிலொன்பான் மணிக ளார்ந்த
கணம்பயிலு மரண்மனையிற் பிறந்ததுமோர் காரணமாய்க் கவினு மன்றே.

முத்தானது சரடு பொருந்திய உள்ளிடத்தையுடையது; (குணம்=சரடு; உளம்=உள்ளிடம்). இவ்வரசரோ நற்குணங்களையுடைய மனத்தையுடையவர்; முத்தானது சிறந்த அரசர்களது முடியில் தரிக்கப்படும் மணியாயிருப்பது; இவ்வரசரோ சிறந்த அரசர்களுக்குட் சிறந்த இரத்தினம்போல விளங்குபவர். ஆகிய இவ்விருகாரணங்களாலும், வாசனை வீசுகின்ற மலர்மாலையை அணியப்பெற்ற மார்த்தாண்டபைரவர் என்னும் பெயரைப்பெற்ற சோழராஜர் பரம்பரையிலுதித்த இம்மகாராஜா தமது பெரும் புகழ்போலத் தாவள்யமாக விளங்கும் முக்தமணியை ஒப்பாவார். அன்றியும் அம்முத்தைப்போலத் தாமும் சுவாதி நக்ஷத்திரத்தில் தமது நவமணிகளிழைத்த சிறந்த வேலைப்பாடுமுற்றிய அரண்மனையில் ஜனித்ததும், அம்முத்தைத்தாமொத்தற்குக் காரணமாகும்.

(சுவாதி நக்ஷத்திரத்தில் முத்துப்பிறக்குமென்பது நூற்றுணிபு.)

3. மன்னுயிரே தன்னுயிராய் அவர்சுகமே தன்சுகமாய் மதித்து மானந்
தன்னுயிரின் மிக்கதென மதியமைச்சர்க் கொடுபுரக்குந் தனதன் வாழப்
பொன்னுமிரில் மகன்மருகி மனையமுங்கத் திகிரினைப் போக்கிப்பார்த்தன்
இன்னுயிரைக் காத்தளித்த கண்ணனருண் மாரிபொழிந் திடுக மன்னே.

மன்னுயிர்களைத் தம்முயிர்போலவும், அவரது சுகத்தைத் தமது சுகம்போலவும் பாவித்து, மானமே உயிரினும் சிறந்ததென்று மதிக்கின்ற மந்திரிமார்களால் மநுநெறிவழுவாமல் பிரஜைகளைப் பரிபாலிக்கும் குபேரசம்பத்தைப் பெற்ற மகாராஜாவவர்கள் நெடுங்காலம் சுகமாக மேன்மையோடு வாழ்ந்திருக்கும்படி,

இலக்குமிதேவிக்கும், அவளது உயிர்போன்ற புத்திரனாகிய பிரமனுக்கும், அவள் மருமகளாகிய கலைமகளுக்கும் ஆகிய இம்மூவருக்கும் வாழ்தற்கிடனாகிய தாமரைமலர்கள் குவிந்து கூம்பும்படி ஆகாயத்தில் தமது சக்கிராயுதத்தைச் செலுத்திச் சூரியனை மறைத்து அருச்சுனனது இனிய உயிரைக்காத்தருளிய கண்ணபிரான் தமது திருவருளை மழைபோலப் பொழிந்தருள்வாராக.

இரண்டாமடியில் 'மிக்கதென' என்பதை அரசர்க்குப்பயனிலையாகக் கொண்டு 'புரக்கும்' என்பதனோடு கூட்டினும் ஆம். அப்போது 'மதியமைச்சர்' என்பதைப் புத்தியில்வல்ல அமைச்சர் என்று கொள்க. கண்ணன் சக்கரத்தால் சூரியனை மறைத்தது பாரதத்தில் காண்க.

4. சத்தியங்கைக் கொள்ளுதலால் பன்னிரக்க முடைமையினாற் சண்முகன்போற்
றுத்தியஞ்சேர் குன்றினிடை வாற்பொழுதும் புதுக்கோட்டை துலங்கக் கொண்டு
நித்தியமா யாளுதலால் அலைமானை வேட்டுமுல்லை நெடியோன் போல
நத்தியவண் வாழ்பொழுதும் புரந்திடுக எப்புவிக்கும் நாதன் மாதோ.

இதன் பொருள்—சத்தியத்தை உறுதியாகக் கைக்கொள்ளுதலாலே, (சத்தியென்னும் வேலாயுதத்தை அழகிய கையில் ஏந்தியிருத்தலினாலே,) சொல்லாநின்ற ஜீவகாருண்யத்தை யுடைமையினாலே, (பன்னிரண்டு கண்களையுடைமையினாலே) ஆகிய இக்காரணங்களாலே முருகக்கடவுளை யொத்துப், பலராலும்புகழ்பெற்ற மலையினிடத்தே வாழும்போதும்; புதுக்கோட்டை யென்னும் நகரைத்தமக்கும் விளங்கும் ராஜதானியாகக்கொண்டு என்றென்றும் ஆண்டுவருதலாலும் (புதியசங்கை ஆயுதமாகக்கொண்டு அகிலபுவனங்களையும் என்றும் ஆண்டுவருதலாலேயும்) அலைகின்ற மான்குலங்களை விரும்பி வேட்டையாடுதலாலும், (அலைகடலிற்பிறந்த மான்போன்ற பார்வையையுடைய இலக்குமியை மணம்புரிதலாலும்) ஆயர்பாடியில் வளர்ந்து மகிழ்ந்த கண்ணபிரானை யொத்து அந்நகரின்கண்ணே விரும்பிவாழும்போதும் நம் மகாராஜாவை எப்புவிக்கும் இறைவனாகிய சர்வேசுவரன் காத்தருள்வாராக.

இப்பாடலில் இம்மகாராஜா தமது ராஜதானியாகிய புதுக்கோட்டையிலே யன்றி நீலகிரியிலும் சௌக்கியத்துக்காகச் சென்றிருத்தலைச் சுட்டிக்கூறினார்போலும். குன்றின்மேலிருத்தல் முருகக்கடவுளுக்குப் பிரியமானது. 'முல்லைநெடியோ' னென்றதனால் புதுக்கோட்டையானது காடாரம்பற்றான சீமையென்பதைக் குறிப்பித்தார்போலும். அலைமானைவேட்டு மென்பதும் இப்பொருளையே அநுகூலிக்கின்றது. வேட்டம் மன்னர்களுக்கு உரியதென்பதையும் உணர்த்தும். இப்பாடலில் மகாராஜாவை முருகக்கடவுளுக்கும் திருமாலுக்கும் உவமித்தார்.

5. நன்னலஞ்சேர் புதுக்கோட்டை மழைவளத்தாற் செழிக்கமறை நாவர்வாழ்க
துன்னலர்தம் பகையொதுக்கி நமைப்புரக்கு மார்த்தாண்டத் தொண்ட மான்றன்
பன்னலஞ்சேர் குலம்வாழ்க மதியமைச்சர் பணிகுடிகள் பலரும் வாழ்க
மன்னவரை மால்நிகராக் கொண்டாடும் இச்சபையோர் வாழ்க வாழ்க.

நல்வளங்கள் பொருந்திய இப்புதுக்கோட்டை ராஜ்யமானது மழைவளத்தினாற் செழிப்படையக்கடவது; வேதப்பிராமணர்கள் வாழக்கடவர்; பகைவரது பகையைநீக்கி நம்மைப்பரிபாலிக்கும் மார்த்தாண்டபைரவத் தொண்டமான் மகாராஜாவின் பல நலங்களும் பெற்ற வம்சம் அபிவிர்த்தியாகுக; புத்தியில்வல்ல அமைச்சர்களும் கோலின்கீழமைந்து வாழும் குடிகளும் வாழக்கடவர்; மகாராஜாவைத்திருமாலுக்குச் சமானமானவராகச் சொல்லித் துதிக்கும் இச்சபையோர்களும் வாழ்ந்திருக்கக்கடவர்.

பி. ஆர். கிருஷ்ணமாசாரி.

"THE VOICE OF PROGRESS."

"புரோவிருத்திபோதினி."

'புரோவிருத்தி போதினி' யென்று பொருள் படும் பெயருடைய இப்பத்திரிகையின் இரண்டாவது சஞ்சிகை நம் பார்வைக்கு அனுப்பப்பட்டது. இப்பத்திரிகை நூதனமாயேற்பட்டுச் சென்ற அக்டோபர்மாதம் தொடங்கி சென்னை ஹிந்து ஜனசாரச் சீர்திருத்தச் சங்கத்தாரின் உபசங்கத்தாரால் மாதாந்தப் பத்திரிகையாக வெளியிடப்பட்டு வருகிறது. இது மூன்று பாகமாகப் பிரிக்கப்பட்டு முதலிற் பெரும்பாகமும் இங்கிலீஷ் பாஷையிலும், இரண்டாம் பாகம் தெலுங்கிலும், மூன்றும் பாகம் தமிழிலும் தனித்தனியே வெவ்வேறு விஷயங்களைப் பற்றி விவரிக்கின்றது. இது தான் கொண்ட பெயருக்கேற்ப முக்கியமாக ஸ்திரீகளின் புனர்விவாகம், ஸ்திரீவித்தை, சமுத்திரயானம் முதலான ஜனசாரச் சீர்திருத்தச் சங்கத்தாரால் எடுத்து வியவகரிக்கப்பட்ட விஷயங்களையே விவரிக்கின்றது.

இவ்விரண்டாவது சஞ்சிகையி லடங்கிய விஷயங்களில் 1. தென்னிந்தியாவில் சென்ற ஐம்பது வருஷத்துச் சீர்திருத்தம், 2. மிஸ்டர் ஷாமராவ் வைதல் என்பவரின் உபந்யாசம், 3. ஜனசாரச் சீர்திருத்தத்தார்மேற் சார்த்தப்படும் குற்றம், 4. தன் சொந்த நடவடிக்கைகளில் சீர்திருத்தத்தை அவலம்பிப்பவன் சங்கத்துக்கு நன்மை செய்கின்றனோ? 5. சர்வகலா சங்கத்தாரின் அங்கத்தாரைத் தெரிந்து நியமித்தலும் அந்நியமனத்தைத் தேடுதலும் என்பன இங்கிலீஷிலும், 1. விவாகம், 2. சமுத்திரயானம், 3. நீதிவர்த்தனம் என்பவை தெலுங்கிலும், 1. நாகரிகம், 2. பெண்கல்வி யென்பவை தமிழிலும் முக்கியமானவைகளாம்.

மாதிரிக்காக நாகரிகம் என்னும் தமிழ்ப்பாகத்திற் கூறிய விஷயத்தினின்று பின்வருவனவற்றை எடுத்துக் காட்டுகின்றோம்.

"மரியாதையுள்ள நல்லொழுக்கமே நாகரிகத்திற்கு அடையாளமாம். அது தொடங்கவேண்டியது நம்முடைய வீடுகளிலேயே. ஆகையால் தீய வார்த்தைகளை நம்முடைய குழந்தைகள் கற்றுக்கொள்ளவொட்டாமல் தடுப்பது நாகரிகம்; வீடுகளைப் பரிசுத்தமாய் வைத்திருப்பது நாகரிகம்; வீண் செலவு செய்யாதிருப்பது நாகரிகம்; சாதியும் பிறப்பும்பற்றிப் பிறரை இழிவாகப் பேசாதிருப்பது நாகரிகம்; பெரியோர்களிடத்தில் வணக்க வொடுக்கமாய் நடந்துகொள்வது நாகரிகம்; நம்முடைய ஆசாரங்களிற் கேடு விளைக்கத்தக்கவைகளை உடனே நீக்குவது நாகரிகம்; கல்வி யுடையவர்களை மதிப்பது நாகரிகம்; சொன்னதைச் செய்து முடிப்பது நாகரிகம்; பயனில்லாத பழம்பொருள்களைக் கழிப்பது நாகரிகம்; பயனுள்ள புதுப்பொருள்களை ஏற்றுக்கொள்வது நாகரிகம்; காலத்துக்கேற்றபடி அனுகூலமான புதிய வழக்கங்களை அனுஷ்டிப்பது நாகரிகம்; விரோதமின்றி ஒருமித்து ஒத்துவாழ்வது நாகரிகம்; உண்மைதோன்ற வாதிப்பது நாகரிகம்; தன்னெஞ்சறிவது பொய்யாதிருப்பதும் நாகரிகம்."

இப்பத்திரிகை இங்கிலீஷ் கற்றவர் கல்லாதவர் ஆண்பாலார் பெண்பாலார் பலருக்கும் உபயோகமாகுமென்பதிற் சந்தேகமில்லை. சொற்பிழை எழுத்துப்பிழையின்றிச் சுலபநடையில் தெளிவான அச்சிற் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதன் சந்தாத்தொகை வருஷத்துக்கு இரண்டு ரூபாயேயாதலின் எல்லோரும் எளிதில் வாங்கிப் படித்துப் பயன்பெறக்கூடியது. இதற்கு நீண்ட ஆயுளும் பயன்பற் வாழ்க்கையும் வேண்டுகின்றோம்.

A CIRCULAR FROM THE GENERAL SECRETARY SOCIAL CONFERE.

ஜனசாரச் சீர்திருத்த சபை.

ஜனசாரச்சீர்திருத்த மஹா சபையாரின் காரியதரிசியாகிய ம-ா-ா-ஸ்ரீ, சந்திரவர்க்கர் என்பவரால் அனுப்பப்பட்ட கடிதத்தை அவர் கேட்டுக்கொண்டபடி நமது பத்திரிகையில் தமிழ்ப்படுத்திப் பிரசுரிக்கின்றோம்.

பம்பாய், 30. நவம்பர் 1901.

ஐயா,

முடிவாகின்ற இவ்வருஷத்தில் ஜனசாரச்சீர்திருத்தவிஷயமாய்த் தங்கள் சங்கத்தாராற் செய்யப்பட்ட முயற்சிகளைப்பற்றி விவரித்து ஒரு ரிபோர்ட்டு தம்மால் கூடிய சீக்கிரத்தில் எனக்கு அனுப்பும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த டிசம்பர்மாதம் கடைசி வாரத்தில் கல்கத்தாவில் கூடப்போகிற மஹா சபையில் (Conference) உங்கள் ரிப்போர்ட்டுக்களின் சுருக்கமொன்று தயார் செய்து படிக்கப்படவேண்டுமென்பது முன் ரிப்போர்ட்டுக்களைத் தாங்கள் படித்துப்பார்த்தால் தெரியவரும். ஆகையால் டிசம்பர்மீ 15உக்கு முன்

னேதானே கூடியசிக்கிரத்தில் தங்கள் சங்கத்தார் செய்துள்ள காரியங்களைப்பற்றியும், மற்றச் சிநேகிதர்கள் முயன்றுசெய்துள்ள சீர்திருத்தங்களைப்பற்றியும் அம்முயற்சிகளில் அவர்கள் அடைந்துள்ள காரிய சித்தியைப்பற்றியும் பூர்த்தியான ஒரு ரிபோர்ட்டு எனக்குத் தயவுசெய்யக் கோருகிறேன். அனுப்பும் ரிப்போர்ட்டானது நிறைவேற்றிய காரியங்களின் விவரங்களையும், பேர்பதியப்பட்ட அங்கத்தாரின் சங்கியையும் அவர்களைக் கட்டுப்படுத்திய உறுதிமொழிகள் ஏதாவதுண்டெனில் அவற்றின் தன்மையையும், ச[illegible]ாம்பெற்ற பெருமலோ போதகர்களால் யாதேனும் உபநியாசம் செய்யப்பட்டதா என்பதையும் அல்லது வியாசங்கள் எழுதி வெளியிடப்பட்டனவா என்பதையும் காட்டவேண்டும்.

கல்கத்தாவில் கூடப்போகிற மஹா சபையாரால் ஆலோசித்தற்குரியவைகளாகத் தோன்றும் விஷயங்களின் பின்வரும் ஜாப்தாவையும் தங்கள் பார்வைக்கு அனுப்பியிருக்கிறேன். தங்களுக்கு உசிதமென்று தோற்றுகிறபடி இந்த ஜாப்தாவில் கண்ட விஷயங்களில் கூட்டவோ குறைக்கவோ எண்ணுவீராயின் அதையும் தெரிவிக்கவேண்டும். அங்கங்கே ஊர்கள் தோறுமுள்ள சங்கத்தாரால் குறிப்பிக்கப்படும் யோசனைகளை ஜாக்கிரதையாய் ஆலோசித்து முடிவாகவிஷயங்களைத் தெரிந்தெடுத்து ஏற்படுத்திக்கொள்ளப்படும். முதல் தீர்மானம் சஹஜமாக கனம் ஜஸ்டிஸ், எம். ஜி. ரானடே அவர்களின் மரணத்தால் இத்தேசத்துக் குண்டான மீட்கரும் நஷ்டத்தை வெளியிட்டு, இந்த மஹாசபைக்கு இதனை ஸ்தாபித்து யாவத்ஜீவகாலமும் இதற்காக உழைத்துச்செய்த விலைமதித்தற்கரிய பேருதவியைக் குறிப்பிடுதலும் ஆகும். பங்காளம் பீஹார் என்பவற்றின் விசேஷ நிலைமைக்கு மிகவும் பொருத்தமாகத் தோன்றும் விஷயங்களாவன :—

1. 'ப்ரைமெரி,' 'ஸகிண்டெரி' என்னும் இரு வகையான பாடசாலைகளையும், அவரவர் இல்லங்களில் தத்தம் பந்துக்களால் கற்பிக்கப்படும் பெண்களின் வித்யாபிவிர்த்தியைப் பரிசோதிக்கும்படி யூனியன்களால் கல்கத்தாவுக்கு வெளிப்புறங்களில் செய்துவரும் முயற்சியை பலப்படுத்த இல்லப் படிப்பு வகுப்புக்களையும் ஏற்படுத்தி அவற்றின் மூலமாய்ப் பெண் கல்வியை இன்னம் விசேஷமாகப் பரவச்செய்தலின் ஆவசியகம்.

2. பல மனைவியரை விவாகம்செய்தல், கூலின் ஆசாரம் என்னும் விஷயங்கள். கூலின் ஆசாரத்தின் கெடுதிகள் காலக்கிரமத்தில் அநேகமாகக் குறைந்துவரினும் இன்னம் அந்த ஆசாரம் இத்தேயத்தில் வேறெங்குமில்லாதபடி இங்கு வர்த்தனையாய்க்கொண்டுவருகிறது. அத்துராசாரத்தை முற்றிலும் நீக்குதற்கு என்னவழி என்பதை ஆலோசித்தல் உசிதமானது.

3. சமுத்திரயானமும், தேசாந்தரப் பிரயாணமும், தேசாந்தரப்பிரயாணம் செய்துவந்தவர்களைச் சேர்த்துக்கொள்ள ஜனங்களின் சம்மதியைப் பெறுதற்பொருட்டு வங்காளத்தில் சென்ற சில வருஷங்களாக விசேஷ பிரயத்தனங்கள் செய்யப்பட்டுள்ளன. உத்தேசித்த பிரயோஜனத்தை அடையும்படி இப்பிரயத்தனங்கள் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்தல் அவசியம்.

4. விதவா புனர்விவாகப்பிரயத்தனம். இது வங்காளத்தில் முதல் முதல் ஆரம்பிக்கப்பட்டதாயினும் மற்ற விடங்களில் முன்னினும் அதிகமாக முயன்றுவரவும் அங்கு இவ்விஷயமாய்ச்சிறிதுகாலமாக ஏதும் சிரத்தை யெடுத்துக்கொள்ளப்படவில்லை யென்று காண்கின்றது. இந்தச் சிரத்தைக் குறைவுக்குக் காரணம் யாதென்றும் அதை நீக்கும் விதம் இன்னதென்றும் வியவகரித்து நிச்சயித்தல் அவசியம்.

5. மதவிஷயமான தருமங்கள் கோயில் குளங்களுக்கும் தருமங்களுக்கும் ஏற்பட்ட சொத்துக்களைத் துர்விநியோகப்படுத்தும் அக்கிரமங்களைப் பற்றி மற்ற விடங்களிற்போலவே பங்காளத்திலும் விசேஷமாக முறையிடப்படுகின்றது. இவ்விஷயமாக ஜனாபிப்பிராயத்தை இன்னம் விருத்திபண்ணி வழக்கத்தில் உள்ள கெடுதிகளைக் கூடியவரையில் நீக்குதல் [illegible] அவசியமானது.

6. தத்தம் அந்தரங்க பஹிரங்க நடவடிக்கைகளில் தூய்மையுடையாராகச் செய்தலிற் பிரயத்தனப்படும் விரிந்த முயற்சியின் ஒருபாகமாக மதுபானத்தை விலக்கும் விஷயம்.

7. பெரியஜாதிப் பிரிவுகளுக்குட்பட்ட சிறு வகுப்புகளை ஒன்றுசேர்த்து அவர்களுக்குள்ளே பரஸ்பரவிவாகம் ஏற்படுத்துதல்.

8. பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் விவாகத்துக்குரியதாக வரையறுக்கப்பட்ட வயதை இன்னம் உயர்த்திக் கல்யாணம் சிராத்தம் முதலிய சடங்குகளின் செலவுகளைக்குறைத்தல்.

9. இதரமதத்தில் பிரவேசித்துப் பின்பு ஹிந்து மதத்தில் சேரவிரும்புகிறவர்களை மறுபடி சேர்த்துக் கொள்ளும் விஷயத்தில் ஊக்கம் அளித்தலின் அவசியம்.

10. ஹிந்து சங்கத்தைச்சார்ந்த அநாரியர்கள் பறையர்கள் இவர்களின் உரிமைகள்.

இவ்விஷயங்கள் உங்களுக்குச் சம்மதந்தானு வென்பதையும் இவற்றில் யாதேனும் மாற்றங்கள் குறிப்பிடுவீராயின் அவற்றையும் தயவுசெய்து எனக்குத் தெரிவிக்கவேண்டும். முடிவில், 1895-ம்ளூ முதல் மஹா சபையில் செய்யும் ஆலோசனைகளெல்லாம், யாதேனும் ஜனசாரச்சீர்திருத்தச் சங்கத்தாரால் ஒப்புக்கொள்ள அங்கத்தாராலோ அல்லது இவ்விஷயமாக சர்வப்பிரசித்தமாக அநுதாபமுடையவர்களாலோ மாத்திரம் செய்யப்படவேண்டுமென்பது நியமமென்பது நான் தங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. ஆதலின் உங்கள் சங்கங்களையோ அல்லது இச்சீர்திருத்தங்களில் அநுதாபமுடையவர்களையோ சேர்த்துச் சபைகூட்டி மகா சபைக்கு உங்கள் பிரதிநிதிகளைத்தெரிந்து நியமித்து அவ்வாறு நியமிக்கப்பட்ட கனவான்களின் பெயர்களையும் கூடியசீக்கிரத்தில் எனக்குத் தெரிவிக்கவேண்டுகிறேன். நமக்கு முன்னிருக்கும் காலம் அதிசொற்பமாயிருக்கிறபடி படியால், நீங்கள் குறிப்பிடும் யோசனைகளைச் சற்றும் தாமதமின்றிக் குறிப்பிட வேண்டும்.

தவிர்க்கமுடியாத சில அசந்தர்ப்பங்களால் 1900-ம்ளூத்து லாஹோர் மஹாசபையின் ரிபோர்ட்டு இன்னம் வெளிப்படுத்தப்படாதது மிகவும் விசனிக்கலாவது. இவ்வருஷத்து ரிபோர்ட்டையும் சென்ற வருஷத்ததையும் ஒரே புஸ்தகத்தில் வெகுசா வெளிப்படுத்தவேண்டிவரும்.

தங்கள் உண்மையுள்ள
**என். ஜி. சந்திரவர்க்கர்,**
ஜனசாரச்சீர்திருத்த மஹாசபையாரின்
பொதுக் காரியதரிசிக்காக.

[சென்ற டிசம்பர் மாசக்கடைசியில் கல்கத்தாவில் கூடிய மஹா சபையில் இத்தீர்மானங்கள் பெரும்பாலும் அங்கீகரிக்கப்பட்டன. விதவாவிவாஹ சம்பந்தமான விஷயத்தில் மட்டும் வங்காளத்தார் பலர் பிரதிகூலமாயிருந்து எதிர்த்தார்கள். அவர்களும் கனம். சந்திரவர்க்கர் முடிவில் அது விஷயமாகச் சவிஸ்தாரமாய்ச் செய்தபிரசங்கத்தினுல்சமாதானப்பட்டு அது விஷயத்தைப் பற்றி எதிர்த்து நின்று வாதாடியது பிசகென்று ஒப்புக்கொண்டார்களெனத் தெரிகிறது. இச்சபைத் தலைவராயிருந்தவர் ராஜா வினய கிஷ்ண பஹதூர் அவர்கள். வி. சி. ப.]

---

SOME INTERESTING FACTS.

## சில விசித்திரமான விஷயங்கள்.

---

1. நாம் வாசம்செய்யும் பூமியைப்போல பதினுன்குலக்ஷம் கோளங்களை ஒன்றுகச் சேர்த்தால் சூரிய மண்டலத்தின் அளவுக்கொக்கும். இவ்வளவு பெரிய சூரிய மண்டலம் அளவற்ற நெடுந்தூரத்தில் இருத்தலினுலே அவ்வளவு சிறிதாகத்தோன்றுகின்றது.

---

2. பூமிக்கும் சூரியனுக்கும் தூரம் ஒன்பது கோடிமைல். மணி யொன்றுக்கு முப்பது மைல் வீதம் போகும் ரயில்வண்டி யொன்று இங்கு நின்று அங்கு இடையே நில்லாமல் போகக்கூடுமாயின் அது சூரியமண்டலத்தைச் சேருதற்கு முந்நூற்றைம்பது வருடம்வேண்டும்.

---

3. சந்திரமண்டலம் சூரியமண்டலத்தினும் மிகவும் சிறிது. அவ்வளவு தூரமுமில்லை. மேற் கூறிய ரயில்வண்டி இங்கு நின்று சந்திரமண்டலத்துக்குச் செல்லுதற்கு ஒருவருடம் போதும்.

---

4. சாதாரணமாக நமது கண்ணுக்குத் தோன்றும் நக்ஷத்திரங்கள் ஐயாயிரம் இருக்கும். நல்ல தூரதிருஷ்டிக் கண்ணுடியால் நோக்குவோமாயின் ஐயாயிரமன்று; ஐயாயிரம் கோடி நக்ஷத்திரங்கள் காணப்படும்.

---

5. சூரியமண்டலமே அனைத்துக்கும் பெரிதென்றெண்ணக்கூடாது. சூரியமண்டலத்தினும் ஆயிரம்மடங்கு, லக்ஷம்மடங்கு, கோடிமடங்கு, அநேககோடிமடங்கு பெரியவை

யான மண்டலங்கள் அநேகம் ஆகாயத்தில் ஆதாரமின்றி நிற்கின்றன. இவ்வளவென்று எண்ணுதற்கு மரிய நெடுந்தூரத்தில் அவை இருப்பதனாலே தூரதிருஷ்டிக் கண்ணாடியிற் கூட சிறுபுள்ளிகள்போலக் காணப்படும்.

---

6. அமெரிகா தேசத்தில் ரயோடிஜனீரோ என்னும்பட்டணத்தில் ஒருவன் 150-வயதானவன் இருக்கிறானும். உருஷ்யா தேசத்தில் மாஸ்கோ நகரில் ஒருவனுக்கு 140-வயதாயிற்றும். ஸர்வியா என்னும் தேசத்தில் மொத்தம் $22\frac{1}{4}$-லக்ஷம் ஜனங்களில் நூறுவயசுக்கு மேற்பட்டவர்கள் 575 - பேர் இருக்கிறார்களாம்.

---

7. அமெரிகா தேசத்தில் மிஸ் ஹெலன் கெல்லன் என்னும் ஒருமடந்தை கண்குருடாயிருப்பது மன்றி வாயும் ஊமையாம், காதும் செவிடாம். அப்படியிருந்தும் இவள் ராட்க்ளிப் வித்யா சாலையில் மெட்ரிகுலேஷன் பரிக்ஷையிற் றேறினளாம். குருடர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட தட்வி வாசிக்கும்படியான எழுத்துக்களில் பரிக்ஷைக்காயிதங்கள் தயார் செய்து கொடுக்க அக்கேள்விகளுக்குடைப் ரைட்டர் என்னும் யந்திரத்தால் விடை அடித்துக் கொடுத்தனளாம். இதுவும் ஓர் புதுமையே.

---

8. ஜப்பான் தேசத்தில் மின்சாரத்தின் ஏதுவினால் விசித்திரமாக மழைவருவிக்கப்பட்டதாம். மின்சாரத்தை ஆகாயத்திற் செலுத்தி 10-மணி நேரத்துக்கெல்லாம் வானமெங்கும் மேகங்கள் கவிந்து பின்பு அவைகள் கலைந்து போயினும் மறுபடியும் 19-மணிநேரத்துக்குப் பின் அவை தோன்றி ஏராளமானமழையைப் பொழிந்தனவாம். மழை பெய்வித்தல் மனிதர்க்கு வசமாயின் இனி துர்ப்பிக்ஷத்தால் வருந்தவேண்டிவாராது. கலிகாலம் என்று, அறியாதவர்கள் அதனை இகழ்வார்களே யன்றி இக்கலிகாலம்போல உலகத்துக்கு நன்மைக்கேதுவான விசித்திரங்கள் ஒரு நாளும் உண்டானதில்லை.

---

9. தென் அமெரிகா கண்டத்தில் பிரஞ்சு கயானாவில் கேயன் என்னும் நகருக்குச் சமீபமாகப் புதிதாக ஓர் தங்கச் சுரங்கம் கண்டு பிடித்திருக்கிறார்களாம். இது உலகில் உள்ள சிறந்த கனிகளில் ஒன்றும்போலிருக்கின்றதாம்.

---

10. ஜர்மனி ராஜ்யத்தின் ஜனத்தொகை 56,345,014 - ஆம். இத்தொகை பிரான்சு தேசத்தைவிட 190 லக்ஷமும், ஆஸ்திரியா ஹங்காரியைவிட 150 லக்ஷமும் இத்தாலி தேசத்திலும் 220 லக்ஷமும் க்ரேட்பிரிடனை விட 160 லக்ஷமும் அதிகமாம்.

---

11. சென்ற சென்சஸ் ஜனபர்திக்கணக்குப்படி பிரிட்டிஷ் இந்தியாவின் ஜனத்தொகை 231,084,000 - ஆகும். இச்சனத்தொகையின்பேரில் குடிகள் கட்டும் அரசிறையை விதித்தால் நிலத்தீர்வை நீங்கலாகப் பேர்வழிக்கு ரூ. 1 - 5 - வும் நிலத்தீர்வை யுள்பட ரூ. 2 - 6 - 9-ம் ஆகின்றது.

---

12. 30-வருஷம் இடைவிடாமல் உழைத்து லக்ஷம் பவுன் சிலவும் பண்ணிப் பூமியின் பரிமாணம் இவ்வளவென்று க்ளிப்தமாக நிர்ணயிக்கப்பட்டதாம். நிரக்ஷரேகையின் ஒரு முனையிலிருந்து மறு முனைக்குப் பூமியினூடே தூரம் 7,926 - மைல் ; துருவ முனையிலிருந்து மறு முனைக்கு 7,899-மைல்.

---

13. இலண்டன் பட்டணத்துக்கடியில் ஓர் சுக்கான் கற்பாறைக்குள்ளே 2,500 - சதுர மைல் உள்ள பெரிய ஏரி யொன்றிருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறதாம். இது பூமி மட்டத்துக்கு 100 - அடிக்குக்கீழே யிருக்கிறதாம். இவ்வேரிநீர் பட்டணம் முழுதுக்கும் சமிர்த்தியாகப் போதுமாம்.

---

14. ஒருமனிதன் இராப்பகல் ஓயாமல் நடப்பானாயின் பூமியைச் சுற்றிவருதற்கு 428-நாள் செல்லுமாம். அதிவேகமாய் ஓடுகின்ற ரயில்வண்டிக்கு 40-நாளும், தோணிக்கு $32\frac{1}{2}$-மணியும், பீரங்கிக்குண்டுக்கு $21\frac{3}{4}$-மணியும் ஒளிக்கு $\frac{1}{10}$-செகண்டும், மின்சாரத்துக்கும் அதேகாலமும் செல்லுமாம்.

---

15. 1903-ம் ஸூத்தில் செண்ட்லூயி என்னும் அமெரிகாபட்டணத்தில் ஒரு பெரிய பலபொருட்காட்சி ஏற்படுத்தப்போகிறார்களாம். அப்போது ஓர் பெரியகடியாரம் அங்கு காட்டப்படுமாம். அது குறுக்களவில் 75-அடியும் உயரம் 30-அடியும் இருக்குமாம். அதன் சக்கரங்களுக்கிடையே மனிதர்கள் தாராளமாகப் புகுந்து புறப்படலாமாம். அதற்கு நாற்புறமும் ஏணிப்படி ஏறவும் இறங்கவும் வைக்கப்பட்டிருக்குமாம். இதன் சின்னவில்லு கைமொத்தமும் பெரியவில் 300 - அடி நீளமும் இருக்குமாம். இதற்குச் சாவிகொடுத்துத்திருப்புவது நீராவியந்திரத்தினால் செய்யப்படுமாம். மனிதர்கள் விநோதார்த்தமாக என்னெல்லாம் செய்கிறார்கள்! எவ்வளவு பொருள் செலவழிக்கிறார்கள் !

---

16. குதிரை ஆகாரமின்றித் தண்ணீர் மாத்திரம் அருந்தி 25 நாள்வரையில் உயிரோடிருக்குமாம். கரடி ஆறுமாதமும், 'வைபர்' என்னும்பாம்பு 10 மாதமும், சர்ப்பம் 21 மாதமும் இருக்குமாம்.

---

காலஞ்சென்ற நல்லூர் வைத்தியநாதய்யர்.

காலஞ்சென்ற நல்லூர் வைத்தியநாதய்யர் அவர்கள் சென்னைச் சர்வ கலாபரிக்ஷைகளில் உயர்ந்ததாகிய எம். ஏ. பரிக்ஷையிற்றேறி வித்தியாவிலாகாவில் பிரவேசித்துக் கள்ளிக்கோட்டை, கும்பகோணம், சென்னை முதலான விடங்களில் கவர்ன்மெண்டு பாடசாலைகளில் உபாத்தியாயராயிருந்து மிக்க கியாதி பெற்றவர். கும்பகோணம் காலேஜில் நெடுநாள் தர்க்க மீமாம்சாதி சாஸ்திர போதகராயிருந்து சிறிதுகாலம் சென்னையில் பிரஸிடென்ஸி காலேஜிலும் மேற்கூறிய தத்துவ சாஸ்திரங்களில் முக்கிய போதகராயிருக்கப் பெற்றனர். மேலதிகாரிகளுடைய வெவ்வேறு மனோபாவங்களுக்குத் தக்கபடி நடந்து கொண்டுஅவர்களது பிரீதியை சம்பாதித்துக் கொள்ளும் சுபாவ மில்லாதவராய் சுதந்திரபுத்தியாய் நடக்கும் சுபாவமுடையாராயிருந்ததனாலே அம்மேலதிகாரிகளுக்கும் தமக்கும் ஒத்துக்கொள்ளாமல், அக்காரணத்தால் தமக்கு இன்னம் போதுமான 'சார்விஸாகு' முன்னமே பென்ஷன் பெற்று வேலையைவிட்டுப்பிரிந்து தம்மிஷ்டப்பிரகாரம் இருந்துவந்தனர். ஜனோபகாரமான காரியங்களை மேற்கொண்டு செய்யும் செய்கையிலும், மெய்ந்நெறிநின்றும் தவறாத நடுநிலையான ஒழுக்கத்திலும் தம்மை மேற்கோளாக ஏனையோர் கண்டு நடந்து கொள்ளும்படிச் சிறந்தவர். இவர்தாம் மேற்குத்திசையாரது தத்துவ சாஸ்திரங்களில் மிகத் தேர்ந்தவராதலினாலே இந்து தத்துவ சாஸ்திரங்களின் அருமை பெருமைகளை அறியவல்லவராய் வேதாந்தசாஸ்திரமானது தலையெடுத்துத் தழைக்குமாறு கும்பகோணத்தில் அத்துவைத சபை யென்று ஒரு பண்டித சங்கத்தைத் தாபித்து அது நிலைபெற்று வளரும்படி நெடுங்காலம் முயன்று வந்தனர். தமது நிர்யாணகாலத்துக்கு முன்னேடு இச்சபைக்கு மாணுக்கர்களும் அவையவர்களுமர்கும்பொருட்டு இளைஞர்களைப் பயிற்றுவிப்பதற்காக வேதவேதாந்த பாடசாலை யொன்றை யேற்படுத்தி நடத்திவரும்படி ரூபாய் பதினாயிரம் பெறும்படியான ஆஸ்தியை எழுதிவைத்து விட்டுப்போனதாகக் கேள்வி. இத்துணைப் பொதுநன்மைக்கேதுவான பெருங்காரியத்தைச்செய்த இச்செய்கையொன்றே இவரது பெருமையையும் பரோபகார சிந்தையையும் விளக்குவதற்குப் போதுமானது. இவர் அருமையான விஷயங்களை எளிதின் உணரும்படி மிகத்தெளிவாகத் திருஷ்டாந்தாதிகளாலே

விளக்கி மாணாக்கர்களுக்குப் போதிக்கும் விஷயத்தில் மிகவும் தேர்ந்தவர். அவ்வாறே எழுதும் காலையினும் தம்கருத்துத் தெளிபுனல் போலே விளங்கும்படிச் செவ்வையாக விளக்கி எழுதும் சாமர்த்தியமுடையவர். செல்வத்தையும் பெருமிதத்தையும் கண்டு மயங்காமல் எவ்வகைப்பட்டவர்களையும்அவரவர்யோக்கியதையை அறிந்துமதிக்கும் தன்மையையுடையவர். இவருக்கு இன்னம் ஐம்பது வயது கூட ஆகாமையினாலே இவர் இவ்வளவு சீக்கிரமாக இறந்துபோனது நமது தேசத்துக்குப் பெரிய நஷ்டமாகவே கருதத்தக்கது. இவர் இன்னம் சிறிது காலம் கூட சுகஜீவியாயிருப்பாராயின் தாமே அநேகநன்மைகளைச் செய்வதன்றி பொது நன்மைக்காகப் பாடுபட்டுழைப்பார்களுக்கு மிக்க உதவி புரியக்கூடும். ஆயினும் அவ்வளவுதான் நாம் கொடுத்துவைத்தது. இவருடைய அகாலமரணத்தைக் கேட்பவர்கள் எல்லோரும் மிகவும் வருந்தித் துக்கிப்பார்கள் என்பதிற் சந்தேகமில்லை. இவருக்குப் பிள்ளைகள் இல்லை. மனைவியார்மாத்திரமே இவருக்குப்பின் சேடிதா நிற்பவர். அவருக்கு நேர்ந்த குறைக்காக எல்லாரும் அவரோடும் மனமுருகி அநுதாபப்படுவார்கள் என்பதில் யாதும் ஐயமில்லை.

## Current Notes.

## விசேஷவர்த்தமானக் குறிப்புகள்.

பிரதிவருஷமும் வருஷக்கடைசியாகிய டிசம்பர் மாதம் பற்பலவிசேஷங்கள் நிகழ்தற்கு ஏற்றகாலமாயுள்ளது. சென்ற டிசம்பர் மாசத்தில் நடந்த முக்கியமான சில விசேஷங்களை இங்கு சங்கிரகித்துக் கூறுவோம். கல்கத்தாநகரத்தில் இந்தியன் நாஷநல் காங்கிரஸ்ஸென்னும் மஹாசபை பதினேழாவது முறைகூடியது, அச்சபைக்கு மிஸ்டர் டின்ஷா யெடல்ஜிவாச்சா என்னும் பம்பாய்வாசியாகிய பார்சி கனவான் ஒருவர் அக்கிராசனாதிபத்தியம்வகித்திருந்தனர். அவர் அந்தஸ்தானத்தில் வழக்கப்படி உபன்யசித்த உபந்யாசம் அவ்வளவும் பொருள் நிரம்பியதாய், கேட்பவர்க்கும் படிப்பவர்க்கும் அவர் வற்புறுத்தக்கோறிய விஷயங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெளிவாய்விளக்கி, அவரது ஆழ்ந்தகன்ற அறிவைப் புலப்படுத்துகின்றது. இவர் இவ்வுபந்யாசத்தில் முக்கியமாகவிவரிக்கும்விஷயம் என்னெனில், மற்றத்தேசங்களைப்போலன்றி இத்தேசத்தில், ஏன் க்ஷாமங்கள் அடிக்கடி உண்டாகின்றனவென்றும், அவற்றை நிவிர்த்திக்கும் உபாயங்கள் இன்னவென்றும், விவரமாகவிளக்குவதாகும். இவர், இத்தேசத்தில்,க்ஷாமங்கள் மழையில்லாமை வறட்சி முதலிய இயற்கைக் காரணங்களால் உண்டாயினும், அவைதாமே க்ஷாமகாலங்களிலுண்டாகும் லக்ஷோபலக்ஷம் எளிய ஜனங்களுடைய மரணத்துக்குக் காரணமாகாவென்றும், ஜனங்களுடைய ஏழைத்தனமே முக்கியகாரணமென்றும், வற்புறுத்திக் கூறுகின்றனர். துரைத்தனத்தார் க்ஷாமகாலங்களில் ஜனங்களில் உயிர்களைக்காக்கும்பொருட்டுச் செய்யும் தருமங்களுக்கு, அவரை நாம் எவ்வளவு சிலாகித்துக் கொண்டாலும் போதாதாயினும், யுத்த முதலியகாரியங்களுக்குக் கோடிக்கணக்காய்ச் செலவுசெய்கின்ற துரைத்தனத்தார், க்ஷாமநிவிர்த்திக்காகச் செலவு செய்ய நேர்ந்தபோது, எவ்வளவோ சிக்கெனப்பிடித்துச் செலவுசெய்கின்றனரென்றும், கூறுகின்றனர். நன்றாய் விளைந்து புஷ்டியானகாலத்தில் பயிர்செய்பவர்களுக்குப், பற்பல நிர்ப்பந்தங்களால் விளைவில்லாமல் மெலிந்துபோகும்காலத்தில், தமக்கு உதவும்படிச் சேர்த்துவைத்துக்கொள்ளமுடியாமல் இருக்கின்றதென்றும்; சர்க்கார் கிஸ்து நாளுக்குநாள் அதிகப்பட்டு ஜனங்களிடத்திலிருந்து கிட்டிகட்டி நிர்த்தாக்ஷண்யமாக வசூல்செய்யப்படுகின்றதென்றும்; ஆகையால் இக்காரணங்களை நீக்கி, லாபமில்லாத ரயில்வேலைகளை மேன்மேலும் தொடங்கிச் செய்ததற்கு மாறாக, பாசனவேலைகளை மிகுதியாக விருத்தி செய்தலாலும், மற்றக்காரணங்களாலும், அப்பஞ்சங்களை நிவர்த்திசெய்ய வேண்டுமென்றும்; இன்னம் இது சம்பந்தமாக அநேகவிஷயங்களைச் சொல்லி வெகு விஸ்தாரமாக விவரிக்கின்றனர்.

இம்மகாசபையைத் தொடர்ந்து, ஹிந்து ஜனசாரச்சீர்திருத்தச் சங்கத்தார்களின் சபையும் வழக்கம்போல இங்கே கூடியது. இவையன்றி, இவ்வருஷத்தில் நூதனமாகக் காங்கிரஸ்ஸைச் சம்பந்தித்து அச்சபை கூட்டியவர்களின் உதவியால் கல்கத்தா

வில் கைத்தொழில் விற்பனக்காட்சியொன்று ஏற்படுத்திக் காட்டப்பட்டது. இதன் உத்தேசம் இப்போதுள்ள கைத்தொழில்களை விருத்திபண்ணி இன்னம் நூதனமான கைத்தொழில்களையும் உண்டுபண்ணவேண்டுமென்பது.

அங்கு கல்கத்தாவில் இவ்வாறாக, இங்கு சென்னையிலும் அநேகசபைகள் கூடிப் பற்பல விசேஷங்கள் நடந்தன. மாட்சிமைதங்கிய ராஜசக்கிரவர்த்தியவர்களின் மகுடாபிஷேககாலத்தில் நாம் செய்ய வேண்டும் காரியங்களைப்பற்றி ஆலோசித்து நிச்சயிக்கும்படி ஒரு சபை கூடியது. அதின் விவரங்களை இப்பத்திரிகையின் மற்றொருபக்கத்தில் காணலாம். அன்றியும், வித்யாவிஷயமான சபை யொன்று வழக்கம்போல நடந்தது. இச்சபையில், உபாத்தியாயர்களை இப்போதையிலும் செவ்வையாகத் தர்பிதுபண்ணுவதெவ்வாறு கூடும் என்பதைப்பற்றியும், பஞ்சமர்களது வித்தியாபிவிர்த்தியைப்பற்றியும், தற்காலத்தில் பெண்கல்விக்கூடங்களில் கற்பிக்கப்படும் கல்வியின் லாபலோபங்களைப்பற்றியும், கைத்தொழிற் பயிற்சியைப் பற்றியும், இன்னம் சிற்சில விஷயங்களைப்பற்றியும், கடிதங்கள் எழுதி அவ்விஷயங்களைத் தீரவிசாரித்தறிந்த கல்விமான்களால் படிக்கப்பட்டன.

இவையன்றி வருஷாவருஷம் இச்சென்னையிற் கூடுகிறபடி இவ்வருஷமும் பிரமஞானசங்கத்தாரால் (Theosophical Society) அவரது வருஷாந்தச் சபை கூட்டப்பட்டது. அச்சபையில், மிஸ்ஸஸ் அன்னீ பெஸன்ட் என்னும் சீமாட்டி, மகமதிய ஜயின சீக்கமதங்களைப் பற்றி உபந்நியசித்தார். இவரது அற்புதமான கல்வியும் வாக்சாலகமும் யாவர்க்கும் தெரிந்தவிஷயமே. இவர் சொல்லிய விஷயங்களின் சாராம்சம் என்னெனில், எல்லா மதங்களுக்கும் அடிப்படையான சித்தாந்தங்கள் ஒன்றே. ஆதலின் பற்பல சமயத்தார்களும் ஒருவரோடொருவர் கலகியாமல் சமரசப்பட்டு சமாதானமோடும் நேசமோடும் வாழ்ந்திருந்து, ஒவ்வொருவரும் தத்தம் மதங்களின் உயர்ந்த தத்துவங்களைத் தெரிந்து, அவற்றிற் கிணங்க நடத்தல்வேண்டும் என்பது.

இவைதவிர, மகம்மதியர் வருஷம்தோறும் கூட்டுகின்ற 'எடுகேஷனல் கன்பரன்ஸ்' என்னும்வித்யாபிவிர்த்தி விஷயமானசபை இவ்வருஷம் சென்னையில் கூட்டப்பட்டது. இச்சபைக்கு அக்கிராசனாதிபதியாயிருந்த ஜஸ்டிஸ் போதம் அவர்கள், மகம்மதியர் முற்காலத்தில் சௌரியபராக்கிரமங்களிலேயன்றி, கல்வி கலைகளிலும், நாகரிகத்திலும் மிக்க தேர்ச்சியடைந்து பெருமை பெற்றிருந்தனரென்றும், அப்பெருமையைத் தற்காலத்தில் இழந்திருப்பினும், ஒரு மனப்பட்டுழைக்கும் பக்ஷத்தில் மேலாலும் பெறக்கூடுமென்றும், அவர்களில்புத்திசாலிகளான ஏழைப்பிள்ளைகளைப் படிப்பித்தற்குப் பிரத்தியேகமான நிதியொன்றேற்படுத்த வேண்டுமென்றும் கூறினர்.

கடைசியில், திராவிடபாஷைகளை அபிவிர்த்தி செய்தற்காகச் சென்றவருஷம் ஏற்படுத்தப் பட்ட திராவிட பாஷா சங்கத்தின் வருஷாந்தச் சபையொன்றும் கூடியது. இதன் விருத்தாந்தங்களை ஆராயின் நல்லதிருப்தியா யிருக்கவில்லை. இதில் சேர்ந்திருக்கும் மெம்பர்களின் தொகை சென்றவருஷம்போலவே யுள்ளது. ஒருவர் புதிதாகச்சேர இருவர் இதைவிட்டுப் பிரிந்திருக்கின்றனர். சந்தாக்காரர்களில் அநேகர் அடிக்கடி ஞாபகமூட்டப்பட்டும் தம் தொகையைச் செலுத்தாமையால் பொருள் வரவுசென்றவருஷத்தில் ரூ 105-தான். ஆதலால் இச்சங்கத்தார் எடுத்துக்கொண்ட காரியங்களொன்றும் நிறைவேறவில்லை. அடுத்தவருஷம் தொகை போதுமான அளவுசேரும் பக்ஷத்தில், அக்காரியங்கள் மேற்கொண்டு செய்யப்படும். அடுத்த வருஷத்தில் சங்கத்தின் மூலமாய், தமிழிலும் தெலுங்கிலும், ஐரோப்பிய சாஸ்திரசம்பந்தமான உபந்நியாசங்கள் செய்விக்கத் தீர்மானிக்கப்பட்டது. அன்றியும், இயற்கைப் பொருள்சாத்திர (Physics) சம்பந்தமாக அதற்கடுத்த பரிபாஷைகளை யேற்படுத்தியிருத்தல் போல், ரஸாயனசாஸ்திர (Chemistry) சம்பந்தமாகவும், அதற்கடுத்த பரிபாஷையை ஏற்படுத்தக் கருதியிருக்கின்றனர். இச்சங்கம் மேற்கொண்டு செய்ய உத்தேசிக்கும் காரியங்கள், சுதேசபாஷாபிவிர்த்திக்கும் தன்மூலமாக சுதேசாபிவிர்த்திக்கும் அதிமுக்கியமானவையாதலால், இச்சங்கத்துக்குத் தளர்வுவாராமல் பொருளுதவியாலும் காரியங்களாலும் தகுந்த உதவியும் ஊக்கமும் அளித்தல் தேசாபிமானிகளாகிய கல்விமான்கள் செல்வவான்களாவர்க்யகும் கடமையாகும்.

IN THE PRESS—WILL BE SHORTLY PUBLISHED.

THE VIVEKA CHINTAMANI SERIES.

# KANTHIMATHI—A NOVEL IN TAMIL.

**(AFTER SCOTT'S TALISMAN)**

BY

## K. V. SUBHAYYA IYER, B.A., L.T.

கே. வி. சுப்பய்யர், பி. எ., எல். டி., அவர்களால்

இயற்றப்பட்ட

# காந்திமதி

## என்னும் தமிழ்க்கதை

சீக்கிரத்தில் புத்தக ரூபமாய் வெளியாகும்.

---

MOTHERS SHOULD REMEMBER WHEN SELECTING AN ARTIFICIAL FOOD FOR THEIR BABIES,

THREE DISTINCTIVE CHARACTERISTICS OF **MELLIN'S FOOD**

**தாய்மார் குழந்தைகளுக்கு கைப்பால் கொடுத்து வளர்க்க நேரிடுங்கால் கவனிக்கவேண்டியது:—**

மெல்லின்ஸ் ஆகாரம்

1. இலகுஜீரணகாரி; 2. சரிபக்குவ இலகுசாதனகாரி;
3. உமிமூக்கு முதலான அஜீரணவஸ்துக் கலப்பில்லை.

1. It is easily digestible and very assimilable and nourishing;
2. It is readily soluble and may be prepared in a few seconds;
3. It is free from husks and indigestible matter which would cause irritation.

குழந்தைகளுக்கு ஜீரணேந்திரியம் பூப்போலிருப்பதால் மிகவும் இலகுஜீரணகாரியான ஆகாரம் கொடுக்கவேண்டிய தவசியமாயிருக்கிறது. மெல்லின்ஸ் ஆகாரத்தின் மேற்கண்ட முக்கிய குணங்களால் அது சிறு குழந்தைகளுக்கும் ஒத்துக்கொள்வதோடு அதை உபயோகித்து ஜாக்கிரதையாகக் குழந்தைகளை வளர்த்துவருவதினால் குழந்தைகளை மிகப்பாதித்துக்கொல்லும் வயிற்றுப்போக்கு, வலிப்பு, இன்னும் தேகத்தையுருக்கும் இதர வியாதிகள் முதலியன உண்டாகாமல், அவைகளின் உபாதி மிகக் குறைந்திருக்கின்றன.

மெலின்ஸ் ஆகாரம் இந்தியாவில் எங்கும் எல்லா வியாபாரிகளிடத்திலும் கிடைக்கும்.

மாதிரிப்புட்டிகளும், சுதேசபாஷைகள் எல்லாவற்றிலும் அச்சிடப்பட்ட உபயோகிக்கும் முறை விவரங்களும் "Care of Infants in India" என்று இங்கிலீஷில் எழுதப்பட்ட ஒருபுஸ்தகமும் மொத்தவிற்பனை ஏஜண்டுகளாகிய, பின்வரும் கம்பனியாருக்கு எழுதிக்கொள்ளக் கிடைக்கும்.

**Madras: OAKES & CO., Ltd.; Bombay: LATHAM, ABERCROMBIE & CO.; Calcutta: MACKENZIE, LYALL & CO.; Rangoon: LATHAM, BLACK & CO.; Kurrachee: H. J. RUSTOMJEE & CO.; Cocanada: HALL, WILSON & CO.**

---

ADVERTS: CONTRACT RATES.—Yearly Rs. 120 for a full page and Rs. 70 for half a page. English Advts. at 1s. per inch single column per insertion. For further particulars apply to MR. C. V. SWAMINATHA AIYAR, *Secretary, D. K. Agency, Triplicane, Madras.*

VOL. X.] FEBRUARY, 1902. (REGISTERED-NO. M. 108.) [No. 10.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் ÷ பரவச்செய்வதற்கான ÷ மாதாந்தரத் ÷ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE



அட்டவணை. பக்கம்.




Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]



[Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: ANANDHA ASHRAMA, TRIPLICANE.

PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO., POPHAM HOUSE, BROADWAY.

## MADRAS RAILWAY Co.



### Surplus Stores for Sale.

சென்னை ரயில்வே கம்பெனியாரிடம் மிகுந்துபோன சாமான்கள், யந்திரங்கள், இன்னும் பலவிதமான உபகரண சாமான்கள் விற்பனைக்கிருக்கின்றன. அவற்றில் சில கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன.

- Blocks, iron, galvanized, of sorts and sizes.
- Balances, Pooley's, to weigh 400 lbs.
- Beam, for tripod scale.
- Chains, iron.
- Compasses, proportional, and Napier's.
- Divers' Boots.
- Emery flour and powder.
- Fish Plates, Bolts and Nuts.
- Measures, tin, oil graduated.
- Nails, brass-headed.
- Optical square.
- Panel pens $1\frac{1}{4}'' \times 1\frac{1}{2}''$ No. 14.
- Paper binders with brass screws.
- Paper Drawing Demy.
- Do. Do. Mounted Foolscap size.
- Paper Drawing Letter size.
- Do. Loan, Medium size.
- Powder, Terra de Sienna burnt.
- Paper, Tracing 60" x 40"
- Pincers, carpenters,'
- Pipes, Copper $5\frac{3}{4}$."
- Do. Do. 6,"
- Rails, iron, double-headed,
- Ratchets for Screw Jacks.
- Rulers, rolling, parallel.
- Wire, brass, B. S. W. G. Nos. 12 and 17.

விற்பனைக்கிருக்கும் சாமான்களின் ஜாடாவான ஜாப்தா. அதன் விலை குறிக்கப்பட்டுத் தயாராயிருக்கிறது. ராயபுரத்திலிருக்கும் சென்னை ரயில்வே ஜெனரல் ஸ்டோர்கீபருக்கு எழுதிக் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம். சாமானைப் பார்க்க விரும்புகிறவர்கள் ஆபீஸ்நேரத்தில் வந்து பார்வையிடலாம்.

H. BONHAM CARTER, MAJOR, R. E.,

Madras Railway,
Agent and Manager's Office,
Rayapuram Terminus,
Madras, 3rd June, 1901.

Agent & Manager.

## JUST OUT!

## TIRUVACHAGUM

OF

## MANICKAVACHAGAR,

BY

Rev. G. U. POPE, M. A., D. D.

**With Introduction, Translation, &c.**

**Price Rs. 10. Postage, &c., Extra.**

Apply with remittance to

**The D. K. Agency, Triplicane,**

OR

**The Siddhanta Deepika Office, Madras.**

---

### NOTICE.

The Editor of this Journal who has just recovered from a long and tedious illness being compelled under medical advice to take 6 months' complete rest, the conduct of this Journal has been entrusted to a valued friend, who will carry it on, on the same lines as hithertofore. All literary contributions to be addressed merely "To the Editor" without any name.

1ST NOVEMBER 1901.

---

### விளம்பரம்.

இப்பத்திரிகையின் ஆசிரியர் நீடித்த காயலாவாவிருந்து இப்பொழுதுதான் அனுகூலப்பட்டிருக்கிறார். இன்னும் 6-மாசத்துக்கு யாதொருவேலையும் செய்யக்கூடாதென்று டாக்டர் சொல்லுவதால், இப்பத்திரிகையை நடத்தும் வேலை, நமது அரிய நண்பர் ஒருவர்வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. அவர் எப்போதும்போல் இப்பத்திரிகையை நடத்திவருவார். விஷயங்கள் எழுதியனுப்புவோர் "பத்திராசிரியருக்கு" என்று வேறுபேர் குறிக்காமல் விலாசம் எழுதவேண்டும்.

1901-ளு நவம்பர்மீ 1உ.